*"Give me not O God, that blind, fool faith in my friend, that sees no evil where evil is; but give me, O God, that sublime belief that seeing evil I yet have faith."*
*"Seek Truth wherever you can find it." But,*
*"Make your choice and stick to it till you reach the End."*

ஸத்தியம் வத—**SPEAK THE TRUTH.**

"HITCH YOUR WAGON TO A STAR." "TO THINE OWN SELF BE TURE."




*அன்பேயவன்: அறிவேசக்தி: ஓம் தத்ஸத்]* [God is Love: Knowledge is Power: *Aum*

ஸத்தியமே ஜெயம்—**SATYAMEVA JAYATE.**

புத்தகம். 21.] **1913**௵ செப்டம்பர்௴, பிரமாதீச௵ புரட்டாசி௴ [சஞ்சிகை. 6

## NOTICE.

The Editor of the *Vivekachintamani* while thanking his contributors for their valuable contributions, would like to draw the attention of the public to the fact that in pursuance of the uniform policy of this journal, articles could be received only on the understanding that the entire copy right in the articles should be vested solely in the Editor. It would not have become necessary to mention this matter now but for the fact that literary pilfering is becoming more and more prevalent in the journalistic world; and the intentions of the contributors who have by their free gift of the manuscripts helped to further the objects of the Diffusion of Knowledge Agency which the Editor has been maintaining and working for the public good under great difficulties and trials for the past twenty-five years, are being sought to be frustrated by unscrupulous persons.

C. V. Swaminathaiyar,
Editor, & Founder V. C.

S Subrahmaniem,
Joint Hon. Secretary,
Vivekachintamani Rev: Committee.

Lalita Publishing Co.,
Sole Agents and Managers
19, Adam St. Mylapore, S.

"To sell the mind for money is a greater sin than to sell the body."

1. அறிவைப்பரவச்செய்வதற்கான நம் விவேகசிந்தாமணிக்கு வியாச, விஷய தானம் செய்வோர் யாவரேயாயினும் உண்மையான அந்தர்த்தியானத்தோடு பூர்ணமதஸம்மதமாய் விஷயார்ப்பணஞ் செய்யல்வேண்டும். தானம் செய்தபின் தத்தாபஹாரம் செய்யக்கூடாது. தத்தாபஹாரசிந்தையினர்க்கு விவேகசிந்தாமணி சங்கப்பலகைபோலிடங்கொடாதொடுங்கும்.

2. உழைக்கும்வழி யுணராது பிழைக்கவழி தேடும் சில தப்பிலிகள் நம்மை மோசஞ்செய்யாதபடி விவேகசிந்தாமணியிலுள்ள சுதந்திரமெல்லாமெமக்கேஉரிமையாமென்று சட்டப்படி ஆதிமுதற்கொண்டே ஸர்க்கார் கெஜட்டில் தாக்கல் செய்யப்பெற்றிருக்கிறது.

3. விவேகசிந்தாமணியில்வரும் விஷயங்களையாவது அவைசம்பந்தமான ஸாதன ஸம்யம விவேகவிளக்கப்பேர்களையாவது தர்மவிரோதமாயுபயோகித்துக் கர்மவிக்னம் செய்வோர் பிழைக்கவழிதெரியாப் புல்லியர் புகும் பாழ்நரகிற்புக்கார் கதியாவர்: அடாஅது செய்தவா பாடஅது படுவர்: இகபர மிரண்டிலு மிது ஸத்தியம் ஸத்தியம், பலிக்குமென்றே திருஞன் பழனியாண்டவன். வேலுமயிலுந்துணை. ஆண்டானடிமையாய் உழைக்க உடன்பட்டான் கைச்சாற்றிது, ஓ.




## The Viceroy's Visit.

**"The children's Address of welcome to the Viceroy:"** The *Hindu* of the 20th September writes:—"As a sequel to the Children's Tribute of Love, Mr. Swaminathier, Editor of the *Vivekachintamani* has published in the August number of his journrl a "Children's Address of Welcome to the Viceroy," consisting of a song in Tamil which is also versified in English which he proposes should be recited by the children who will be taking part in the celebrations in connection with the Viceroy's visit. We hope his ideas will be accepted and encouraged by those in charge of the arrangements in the City and in the mofussil." Applications for copies should be addressed to the Lalita Publishing Co. Lalitalaya, 19 Adam Street, Mylapore, Madras, S.

## THE VICEROY'S VISIT.

### Proposed Presentation of the Children's Address.

—:o:—

### "The Bond of Love."

"We have set before ourselves a high ideal. We desire to give the young generation of India by means of improved education as good a chance in life as we Englishmen have received. We desire above all to cultivate high intellectual and moral character in institutions where the general tone is one of sound learning and instruction tempered by healthy emulation in sports. At the same time I would wish that the youth of India should be taught wisely and well to be truly patriotic to serve their country with unselfish devotion, to feel to maintain their own great historial traditions and to take a pride in belonging to the land in which they were born. *As a father myself I can sympathise with the parents of India in their aspirations for their children.* I hope to see the young generation of the schools and universities of this land grow up into honest, able and clever men who will play their part not only in the administration but also in the social, moral and material development of this great empire with a clear perception of responsibility and a true appreciation of their duty to the empire, to their families and to themselves. And I, when I think of the students whom I have had the pleasure of seeing in different parts of India and with many of whom I have had the advantage of conversation, am filled with feeling of hope and enthusiasm. It is to the students that my heart goes out and I feel that no sacrifice is too great for their welfare and for their education, for with them and sheir prosperity lies the future of this land and the destiny of India."—*The Viceroy's speech at the supreme Legislative Council, (Simla, 17th September 1913).*

லார்ட் ஹார்டிஞ்சு பிரபு நவம்பர்மீ 23-24உ சென்னைக்குவருவார். அப்பொழுது அவருக்குப்பலர் பலவிதமாய் வந்தனோபசாரம் செய்வார்கள். நகரமாக்கள் ஒன்றுகூடிப் பணம் சேகரித்து நகரை அலங்கரிப்பார்கள். பொது ஜனங்கள் பேரால் வந்தனப்பத்திரங்கள் வாசித்தளிப்பார்கள். குழந்தை மனமுடையவரும் குழந்தைகளிடத்தில் பிரியம் வைத்தவருமாகிய நமது இராஜப்பிரதிநிதியவர்களுக்குக் குழந்தைகள் செய்யத்தக்கதென்ன? மிட்டாய்ப் பொட்டலங்களும், பொம்மை, பெப்பர்மென்ட பில்லைகளும் கொடுத்தால் வாங்கிக்கொண்டு மனங்களிப்பது தானா அவர்கள் செய்யத்தக்கது? அப்படியன்று! "குழந்தையும் தெய்வமும் கொண்டாடு மிடத்திலே" யென்கிறபடி குழந்தைகளைக் கொண்டாடவேண்டி அதெல்லாம் செய்வது சரிதான். ஆனால் குழந்தைகள் 'அன்புரு'வா யமைந்தவர்க ளாதலால், அவர்கள் அன்பு பெருகியோடும். பெற்றவர்கள் யாராயினும் சரி, குழந்தைகளிடம் அன்பு பாராட்டினால் அவர்கள் ஒன்றுக்குப் பத்தாக அன்பு பாராட்டாது விடுவதில்லையென்று கண்டிருப்பார்கள். இதுதான் குழந்தைகளின் ஸ்வபாவம். தெய்வத்தின் ஸ்வபாவமும் இதுவே.

தன்னைக் கொடுப்பவர்க்கு தெய்வம் தன்னையுமுலகையும் ஒன்றாக் கொடுக்கும். "இங்கற்றவர்க்குஅங்குண்டு" என்பது உலகவாஸனைபடிந்தவர்களுக்குச் சொன்னதன்றி குழந்தை மனமுடைய வர்களுக்குச் சொன்னதில்லை.

தூயஹிருதயம் விததிக்கப்பெற்றால் குழந்தை மனம் தானே யதில்குடிகொண்டு முத்தொழிலு ம்செய்யும் ஆற்றலுடையதாய் விளங்கும். பிள் ளையார் பிரஹ்மசாரி யென்று சொல்லுவார் கள். ஆனால் அவருக்குச் சக்திகள் மூன்று என்பதை யறிவார்களில்லை. புத்தி, சித்தி, வல்லபை யென மூன்று சக்திகளுண்டு. புத்தி யினால் அவர் விதியையும் வெல்லுவார். அத னால்தான் அவரை விக்நங்களை விலக்கும் கடவு ளென்று தொழுவது. சித்தியினால் அவர் மனோ சங்கற்ப மாத்திரத்தினால் எதையும் செய்து முடிக்கும் ஆற்ற லுள்ளவர். பார்வதி தேவி யார் பழம் தருவேன் என்று தம்மிரு பிள்ளைக ளையும் கூவி யழைத்துத் தன்னை ப்ரதக்ஷணம்செ ய்துகொண்டு யார்முந்தி வருகிறார்களோ அவர் களுக்குத்தான் இந்தப்பழம் கிடைக்கும் என்று, சொல்ல, இளையகுமாரராகிய சுப்ரஹ்மண்யர் ம யில்வாகனத்தேறி ஈரேழுலகையும் ஒன்றாய்ச் சுற்றிக்கொண்டு ஒரு நொடியில் வருவேனென் று புறப்பட்டார். மூத்தபிள்ளையார் "அம்மா!" வென்று சொல்லித்தாயாரை ஹிருதய கமலத்தி லுள்ள தஹராலயத்தி லிருத்தி தன்னைத் தானே பிரதக்ஷணம் செய்து கொண்டு திரும்பி "அம் மா பழம்!" என்றுகேட்கப் பார்வதி தேவியார், "இல்லை" யென்ன மாட்டாமல் கொடுத்து விட் டார். சுப்ரஹ்மண்யர் அது கண்டு இந்த அஹ முக வித்தையில் நானும் வல்லேவனுவே னெ ன்று தேவசேனாதிபதியாகிய தனது உடைகளை யெல்லாம் கழற்றி யெறிந்து கௌபீனதாரி யாய்த் தண்டேந்தி தண்டபாணியானார் என் று ஐதிகமுண்டு. அந்த தண்டபாணியே உலக குருவாய் தகப்பன்சாமியு மானார்; இப்படியாக எல்லாம் குழந்தைகள் லீலையன்றி வேறில்லை.

"பெற்ற தாயை விற்றடிமை கொள்ளுகின் றபேதைகாள்" என்று சிவவாக்கியர் பாடியபடி தாய் பாஷையைக் கவனிக்காது விட்டு அன் னிய பாஷையைக்கற்று ஆடம்பரம் செய்வார், ஸ்வபாஷா ஞானமில்லாமலிருக்கிறதைக்கண்டு ஐரோப்பியரும் நம்மை ஏசுகிறார்கள். ஆத லால் சிறுகுழந்தைகள் தம்தாயிடமிருந்து கற்ற தாய்பாஷையில் தானே அவருக்கு நல்வரவுப சாரம் கூறி அவர்கள் அன்பை வெளியிட் டுரைக்குமோர் இன்னிசை மொழியில் அவர் களது உள்ளக்கருத்தை வெளியிட்டு அதை இராஜப்பிரதிநிதி யவர்கள் அறிந்து ஆனந்திக்க வேண்டி இங்ஙனேயிலும் இன்னிசை மொழியா கவே வெளிப்படுத்தி யுள்ளோம். இராஜப் பிர திநிதி யவர்கள் ஸெப்டம்பர் ௴ 17உ ஸிம்லா வில்கூடிய இந்தியாசட்டநிரூபணசபையில் பே சிய பொழுது பள்ளியிற் படிக்கும் மாணவர்க ளாம் சிறுவர்களிடம் தனக்கிருக்கும் அன்பு ஆதரவை வெளியிட்டுப்பேசினதன்றி பள்ளியி ற்பழகும் சிறுவர்களைத் தாம் இந்தியாவின் பல பாகங்களிலும் கண்டு பேசினதில் அவர்களால் தான் இந்தியா முன்னுக்கு வர வேண்டுமென் றும் அவர்களிடத்து தனக்கு உள்ளன்பு கார ணமாய் உள்ளப்பற்றுண்டா யிருப்பதையும், அவர்கள் குணத்திலும் மணத்திலும் தேறித் தெளிந்தவர்களாய் இந்தியா துரைத்தன காரி யங்களில் மட்டு மல்ல, ஜனசமூக காரியங்களி லும், சமஷ்டி ஞானம், சன்மார்க்கம் இவற்றி லும் விசேஷ வைபவத்தோடுழைத்து வரவே ண்டு மென்பதே தம்முள்ளக்கருத்தென்றும், தாம் பிள்ளைகளைப் பெற்று வளர்த்த பிதாவாயி ருப்பதால், இந்தியாவிலுள்ள பெற்றோர்கள், பிதாக்கள் மனதை நன்றாயறிந்து அனுதாபப் படக்கூடுமென்றும், அவர்கள்தங்கள்சிறுவர்கள் முன்னுக்கு வரவேண்டுமென்று கொண்டுள்ள உயரெண்ணமெல்லாம் தன்னதே யென்றும் அ ன்பு பூரிக்கப்பேசலானார். ஆதலால் "அரசர் பிரதிநிதியை அன்பாங் குழந்தைகள் நல்வரவு கூறியழைத்தலே" ப்பஹிரங்கமாகத் தானே அத ற்கேற்றபடி நடத்தி, அவ்வுபசார மொழிகளைப் பேழையி லடைத்துக் கொடுக்காமல் பஹி ரஹமுக மொக்கச் சித்திர விலாஸமாகத்தா னே சிறுவர்கள் குதலை மொழியால் கூறியழை

க்கச் செய்யவேண்டு மென்பது நமது கோரிக்கை. அதற்கேற்ற ஏற்பாடுகள் செய்வதில் எல்லோரும் ஏகோபித் துழைப்பார்க ளென்று திருவருளைச் சிந்தித்துப் பிரார்த்திக்கிறோம்.

———:‡:———

## THE VICEROY ON STUDENTS AND SOCIAL SERVICE.

———:(✱):———

"Very different indeed was the conduct of those students from the schools and colleges and the university of Calcutta who went to the relief of the Unfortunate sufferers from the recent terrible floods who were in danger of death from hunger or drowning. These are the young men whom we can honestly and heartily admire for their courage and endurance."—The Viceroy's speech in the Supreme Legislative Council (17th September 1913.)

## உண்மை மாணுக்கர்களும் 'ஊர்ப்பாடு' என்னும் சமஷ்டி சேவையும்.

———:(‡):———

அரசர்பிரதிநிதி அபிப்பிராயம்.

கனம் பொருந்திய லார்ட் ஹார்டிஞ்சவர்கள் ஸெப்டெம்பர்மீ 17உ ஸிம்லாவில் கூடிய இந்தியா சட்ட நிரூபண சபையில் பேசின போது மாணவர்கள் நடத்தையையும் கவர்ன்மெண்டாருடைய வித்யாலக்ஷியத்தையும் பற்றிக் குறிப்பிட்டுப்பேசினர். கவர்ன்மெண்டார் வித்யா போதனுவிஷயத்தில் உயர் லக்ஷியம் கொண்டுழைக்கிறார்களென்றும் பிள்ளைகளுடைய புத்தி விர்த்தியோடு சன்மார்க்க விர்த்தியையும் நாடி அவர்களுடைய 'மனப்பழக்கம்' (கல்வி) உயர்பாவமுடையதும் உயர் நடத்தை விளைப்பதுமா யிருக்கவேண்டுமென்று அவர்கள் பாடுபட்டுழைக்க விரும்புகிறார்க ளென்றும் சொன்னர். வங்காளத்தில் நடந்துவரும் கூட்டக்கொள்ளைகளில் மாணவர்களும் சம்பந்தப்பட்டிருக்கிறதைக்கேட்டு வருத்தமுற்று அவர்கள் செய்காரியத்தைக்கண்டித்துப்பேசியதோடு உண்மை மாணுக்கர்கள் ஊருக்குழைப்பதைப் பற்றி மிகவும் மெச்சிப் பேசினர். வங்காளத்தில் நதிப்பிரவாகத்தினல் 200 சதுரமைல் விஸ்தீரணத்துக்கு வெள்ளம்பரவி, கிராமங்களும் நத்தங்களும் பட்டணங்களும் முழுகிப் போய் ஜனங்கள் தங்கநிழலின்றியும் வெள்ளத்திற்குத் தப்பிப்பிழைக்க வகையின்றியும் தவித்தார்கள். கல்கத்தாவிலிருந்து உண்மைமாணவர் கூட்டம் ஒன்று பல பிரிவுகளாகக்கூடி ஆபத்தில் அகப்பட்டு அவதிப்படும் ஜனங்களுக்கு உதவி புரிந்து உழைத்தார்கள். இப்படி 'ஊர்ப்பாடு பட்டு' உழைக்கும் மாணவர்கள் நடத்தையைப்புகழ்ந்துகொண்டாடி அவர்களேஉண்மை மாணவர்களென்றும் ஊர்ப்பாடுபட்டுழைப்பதே உண்மைச் சேவையென்றும், கெட்ட வழியில் போகிற மாணுக்கர்கள் அவருடைய வர்த்தைகளைக்கேட்டு நல் வழிக்குத் திரும்புவார்களென்று எண்ணுவதாகவும் சொன்னர்.

அரசர் பிரதிநிதி இவ்வாறு புகழ்ந்துபேசிய "ஊர்ப்பாடு பட்டுழைத்தல்" உண்மையில் தானே ஹிந்துக்களுடைய மேலான வித்யாசாதனங்களில் ஒன்றாயிருக்கிறது. பிரஹ்மசரியமும் சமஷ்டி சேவையும் மாணுவர்க்குரித்தானதாக விதிக்கப்பட்டிருக்கிறது. மேலும் வித்தியாப்பியாஸம் செய்யும் பிள்ளைகளின் நோக்கம் வயிற்றுப் பிழைப்புத் தேடும் சோற்றுப்படிப்பாகமட்டும் இருக்கக்கூடாது; கல்வியென்பதே மனப்பழக்கம். வித்தையின் நோக்கமும் முடிவும் உண்மையோர்ந்து உள்ளதுதானுதல். ஆதலால் தான் வித்தியாப்பியாஸம் செய்கிற பிள்ளைகள் குருசேவைசெய்து குருகுலவாஸம் செய்ய வேண்டும்; அல்லது ஊர்ப்பாடுபட்டுழைத்து ஊர்ப்பிக்ஷைகொண்டு வயிறுவளர்க்க வேணடும் என்று ஏற்படுத்தினர்கள்.

"கற்றதனலாயபயனென்சொல், வாலறிவன்
நற்றாள் தொழாஅ ரெனின்"

என்றார் ஸ்ரீ திருவள்ளுவநாயனர். வித்தியாப்பியாசத்துக்கு முதற்படி அத்தியயனம். அதா

வது ஞாபகசக்தியை பலப்படுத்தல். ஞாபகசக்தியின்றிவித்தை பயிலமுடியாது. ஹிருதயமும் மூளையும் துல்லியமா யிருந்தாலன்றி ஞாபகசக்தி பலப்படாது. ஆதலால் வேதாத்தியயனத்தினுல் நாதானுசந்தானம் உண்டாக, அது மூலமாய் ஹிருதயசுத்தியும் மூளைசுத்தியும் உண்டாகும். ஏனெனில் உலகஞான மெல்லாம் சப்தஸ்வரூபமாயிருக்கிறது. இதையே நாத ப்ரஹ்மம் என்று சொல்கிறது. சப்தத்தின் ஸ்வரூபமறிந்தால் வார்த்தையின் அர்த்தம் விளங்கும். வேதாத்தியயனம் வித்தியாப்பியாஸத்துக்கு முதற்படியேயன்றி அதன் முடிவில்லை. இப்பொழுது பள்ளிக் கூடங்களில் 'Recitation' என்று ஏற்பட் டிருப்பது அத்தியயன அம்சத்தைச் சேர்ந்ததன்றி வேறல்ல. அத்தியயனத்தினுல் (Recitation)மனோ சக்தியை விருத்திசெய்து வருகையில் மாணவர்கள் ஊர்ப்பாடு பட்டு ஊர்ப்பிச்சை யெடுத்துழைக்க வேண்டு மென்கிற நியமம் ஏற்பட்டுள்ளது. இளவயதில்தானே "சமஷ்டிசேவை" யென்று சொல்லும் "Social Service"—ஊர்ப்பாடுபட் டுழைக்கும் வழக்கம் படிய வேண்டு மென்றுதான். மனம் விரிந்து விசாலப்பட்டால் மனிதனுக்கு உழைக்கும் சக்தி ஏராளமாக அதிகப்படுகிறது. மனோசக்தியுள்ளவனுக்கு அவனுடைய சக்தியை நல்ல வழியிலுபயோகிக்க ஆஸ்பதம் ஏற்பட வேண்டும். இல்லாவிட்டால் கூட்டக் கொள்ளையில் சேரும் சில வங்காள மாணவர்களைப் போல அதை துர்வழியில் உபயோகிக்க நேரிடும். ஆதலால் ஆத்மசக்தியின் சுபாவமறிந்து மாணவர்களை நல்வழியில் பழக்க வேண்டியது பெற்றோர்களுடையவும் வித்தியா குருவினுடையவும் கடமையாயிருக்கிறது: வித்தியா சம்பன்னராக முதலாவது சிரவணசக்தி வேண்டும். அதாவது குருசொல்வதை கவனமாகக் கேட்டு அதன் அர்த்தத்தை மனதிற்பதியச்செய்து கொள்வதற்கு வேண்டிய கவன சக்தி வேண்டும். இதற்கு அவதானம் என்று சொல்கிறது. தமிழில் "கேள்வி" யறிவு என்று சொல்கிறது.

சிரவணத்துக்குப் பின் மனனம் அவசியம். அதாவது கேட்டுக் கிரஹித்ததை மனதில் சிந்தித்து அதன் அர்த்த பேதங்களால் மயக்குறுமல் உண்மையான உள்ளர்த்தத்தைப் பிடித்துக் கொண்டு அநர்த்தங்களை யெல்லாம் இது அல்ல அல்லவென்று விட்டு நீக்குதல்.

இப்படி மனதார மனதிலூன்றப் பெற்றதை அறிவாலுணர்ந்து "அதுவதுவாதல்" என்னும் விதிப்படி அறிவுமயமாகவேண்டும். இதற்கு நிதித்தியாஸனம் என்றுபேர். ஐயந்திரிபறச் சிந்தித்துணர்ந்த கேள்வி ஞானத்தை அனுபவத்துக்குக் கொண்டுவந்து அபரோக்ஷ ஞானமாக (அனுபவ ஞானமாக)ச் செய்து கொள்ளல் தானே நிதித்தியாசனமாகும்.

இதற்கு யோகமும் உபாஸனையும் சாதக சாதனங்களாம். அதாவது உள்முக, பஹிர்முக வழிகளாம்.

யோகம் என்றால் சித்த விருத்தியை நிரோதம் செய்து அடக்கி ஆளும்சக்தி. இது இஷ்ட சக்தியினுல்தான் ஆகவேண்டுமாதலால் அந்த இஷ்ட சக்தியை (Will-Power) உபாஸனையினுல் வளர்க்க வேண்டும். இதற்கு இஷ்ட தேவதாஉபாஸனை யென்று சொல்கிறது. "இஷ்ட தேவதை" யென்றால் இஷ்டம் என்று சொல்லும் 'இச்சா சக்தி' (Will-Power) யிலிருந்துண்டாகும் திவ்ய தேஜோமயமான சக்தி ஸ்வரூபம் என்று அருத்தம்.

இந்த திவ்ய தேஜோமய சக்தியானது எண்ணினுர்க் கெண்ணியபடி யிருந்தருள்பாலிக்குந் தன்மையதாகையால், அது உபாஸகனுடைய அந்தர்பாவப்படி (உள் எண்ணப்படி) உருவெடுத்தமையும். இந்த உத்தம ரூபத்துக்கு "இஷ்ட தேவதை" யென்றுபேர்.

இந்த இஷ்டதேவதையை அன்போடு பூஜித்து வந்தால் அது இஷ்டத்தின் ஸ்வபாவத்தைக் காட்டிக்கொடுக்கும். இப்படி உபாஸனை

செய்த. ஒருவனுக்கு இஷ்டதேவதை பிரஸந்நமானால் அதுதானே மேலாகவேண்டியவைகளை யெல்லாம் செய்து கொடுக்கும்.

"பார்ப்பினி வேடம் புனைந்து பின்னெனையாண்டு
வேர்ப்பிணி தீர்ந்திட வினைதீர்க்கும் வழிகாட்டி
ஆர்ப்பாடம் செய்தவள் ஆர்வமும் நிறைவித்து
ஊர்ப்பாடுபட்டுநீ யுண்மையுணரென்றான்."

:என்பது அனுபவசாலிகள் திருவாக்கு. இவ்விதமாக வித்யாப்யாஸம் செய்து ஆத்மசக்தியைக் கிளப்பி அதை யடக்கியாளும் முறையே உண்மையான உத்தமவித்தை. இதையே ப்ரோபேல் 'கிண்டர்-கார்டன்' முறையாகச் செய்துள்ளார். 'கிண்டர்-கார்டன்' என்றால் பாலபிருந்தாவனம் எனப் பொருள்படும். அரசர் பிரதிநிதி இந்தியா கவர்ன்மெண்டார் கொண்டுள்ளதாகச்சொல்லிய உயர்லக்ஷியம் வித்யாலக்ஷியமேயாதலால், அதை அனுபவத்துக்குக் கொண்டுவர எல்லாரும் ஒத்துழைக்க வேண்டும்.

——:(*):——

## The Problem of Evil.

BY

**Mr. Rabindranath Tagore.**

Mr. Rabindranath Tagore delivered the third lecture of his series on the Search for God, at Caxton Hall on June 2, his subject being "The Problem of Evil."

The question why there was evil in existence, he said, was the same as why there was imperfection, or, in other words, why creation at all. They must take it for granted that it could not be otherwise, that creation must be imperfect, must be gradual. But the real question was, Was this imperfection the final truth, was evil absolute and ultimate? The current of the world had its boundaries, otherwise it could have no existence ; but its meaning was not in its boundaries, which were fixed, but in its movement, which was towards perfection. The wonder was, not that there should be obstacles and sufferings in the world, but that there should be law and order, beauty and joy, goodness and love. Man had felt in the depth of his life that what appeared as imperfect was the manifestation of the perfect. He had found out the great paradox that what was limited was not imprisoned within its limits; it was ever moving, and therewith shedding its finitude every moment. Pain, which was the feeling connected with finitenss, was not a fixture in our life. It was not an end in Itself as joy was. To meet it was to know that it could not be the principle of permanence in the creation. It was like error in the intellectual life. To read the history of the development of science was to go through the maze of mistakes it made current at different times. Yet no one really believed that science was the most perfect system of disseminating mistakes. Every moment evil was being corrected by the totality of things. They exaggerated its importance by imagining it as at a standstill. But evil was ever moving, so with all its incalculable immensity it did not effectually clog the current of life, and, on the whole, the earth, water, and air remained sweet and pure for living beings. All statistics consisted of deliberate attempts to represent statistically what was in motion, so by this process things assumed a weight in the mind which they had not in reality. If they kept the flashlight of observation turned upon the fact of death, the world would appear like a huge charnelhouse, but it was surprising to think that in the world of life the thought of death had the lesat hold upon our minds. Not because it was the least apparent, but because it was the negative aspect of life; life, as a whole never took death seriously. Evil could not altogether stop the course oi life on the highway and rob it of its possession. For the evil had to pass on; it had to grow into good. If the least evil could stop anywhere indefinitely, it would sink deep and eat into the marrow of existence. The question would be asked. What is goodness? what does our moral nature mean? His answer was that when a man began to have an extended vision of his self he became conscious of his moral nature. God was that which was desirable for the greater Self, and the moral faculty was that by which we knew that life was not made up of fragments, purposeless and discontinuous. To the man who lived for an idea, for his country, for the good of humanity, Life had an extensive meaning, and to that extent pain became less important to him. Pleasure was for one's own self but goodness was for the happiness of all humanity and for all time. So, from the point of view of the good, pleasure and pain must appear in a different meaning; so much so that pleasure might be shunned and pain courted in its place; that death might be made welcome as giving a higher value to Life. Man's freedom was never in being saved troubles; it was in the freedom to take trouble for his own good, to make the trouble an element in his joy. It could be made so only when we realised that in us we had the world-man who was immortal, who was not afraid of death and sufferings, and who looked upon pain as only the other side of joy. He who had realised this knew that pain was part of our true wealth as imperfect beings, and bad made us great and worthy to take our seat with the perfect.

## தீமை யிருப்பதேன்?

"துன்பமும் துக்கமும் இன்பசுகநிழலாம்."

(வரகவி ரவீந்திரநாத் தாகோர் செய்த உபந்யாஸ ஸாரம்)

வரகவி ரவீந்திரநாத் தாகோர் அவர்கள் இங்கிலாந்தில் தங்கியிருந்தபொழுது "காக்ஸ்டன் ஹால்" என்னும் கிறிஸ்தவர் சபாமண்டபத்தில் ஆஸ்திக விசாரம் அல்லது கடவுளைத்தேடியலைதல் என்னும் விஷயமாய்ச் சில அருமையான உபந்யாஸங்கள் செய்தார். அதில் மூன்றுவது உபந்யாஸத்தில் "தீமை யிருப்பதேன்?" என்பதைப்பற்றிப் பிரசங்கித்தார்.

"சர்வம் சிவமயம்" என்னும் பொன்னுரை யுண்மையாயின் எல்லாம் சுபம். எல்லாம் நல்லதாகவே யிருக்கவேண்டுமல்லவா? தீமையிருப்பதேன்? என்றெழும் கேள்விக்கு பதில்கூறிப் பேசினர். முதலாவது தீமையென்றால் என்ன? 'உண்மை-இன்மை' யென்பதுபோல், 'நன்மை தீமை' யென்கிற துவந்த சப்தம் ஏற்பட்டுள்ளது. நன்மையில்லாதது தீமை. தீமையென்று பிரத்தியேகமாக ஒன்று நன்மைக்கு வேறாய் அதற்கு அந்யமாய் இல்லை. 'ஒளி-இருள்' என்பதுபோல் ஒளியற்றது இருள். அதுபோல் நன்மையில்லாதது தீமை. தீமை யிருப்பதேன் என்று கேட்கும் கேள்வி"குறையிருப்பதேன்?" என்னும்கேள்விக்குச்சமமாயிருக்கிறது. "நிறைவெளிதன்னில் நிறைந்த வொரு பூரணத்தைக் குறைவறவே சொல்லவெனிற் சொல்லாலாமோ!" என்றபடி எல்லாம் நிறைவாயிருக்கிற இடத்தில் குறைவு எங்கே யிருந்து வந்தது என்று விசாரிக்கப்புகுந்தால் மட்டும்தான் அது இருக்கோ இல்லையோ என்று சந்தேகம் உண்டாகிறது. ஏனெனில் நித்தியமாயுள்ளது திடீரென்று இல்லாமற் போகாது.

குறையிருப்பதற்குக் காரணம் நிறைபொருளை யுணராத் தன்மையல்லவோ!

நிறைபொருளை யுணராமைக்குக் காரணமென்ன? அறியாமை அல்லது அஜ்ஞானம் (அவித்தை). அஜ்ஞானம் காரணமாகவே இந்தஉலக சிருஷ்டியும் பிரவிருத்தி நிவிருத்தி மார்க்கங்களும் ஏற்பட்டுள்ளன. "Evolution is the Law of Life" என்றுள்ள மூதுரைப்படியே பிரவிருத்தியே பிராணலக்ஷணம். பிரவிருத்தியுண்டானால் நிவிருத்தியு முண்டல்லவோ!

**பிரவிருத்தி**=பூரணத்தை விட்டுப் பிரிந்து தோற்றம் (பிறப்பு), விரிதல் (வளர்ச்சிஅல்லது விருத்தி), குவிதல் (க்ஷயம் அல்லது குறைதல்), நசித்தல் (அழிதல்), மறைதல் (அவ்யக்த மாத்திரமாதல்), அருளல் அல்லது தெருளல் (ஸ்வரூப மாத்திரமாய் நிற்றல்) என்கிற பஞ்ச கிருத்தியங்களும் பிரவிருத்தி காரணமாயுண்டாகும் சிருஷ்டிக் கிரமங்களாம்.

பூரணத்தை விட்டுப் பிரிந்த மனிதன் அப்பிரிவு காரணத்தினாலேயே ஏகன் அனேகனாய்த் தோற்றிக் குறை நிறை பேதங்களுக்கு உள்ளாகிறான்.

ஆகவே இந்த பேத புத்தியினாலே குறைவுக்குக்காரணம் உண்டாகிறது. ஏனெனில் ஏகமாய் எங்கும் நிறைந்ததாயுள்ள ஒன்றிலிருந்து ஒருபாகத்தைவேறுபடுத்தி பாவனை செய்தால், அந்தபாவனை முதிர்ச்சியினால் அபின்னமாகிய பூரணபாவம் மறைந்து, பின்னமாகிய குறைபாவம்ஏற்படுகிறது.

இவ்விரண்டு பாவங்களுக்கும் அபின்ன சக்தியென்றும், பின்ன சக்தி என்றும் பேர்.

பின்ன சக்தியால் பேத பாவனைகளும், அபின்ன சக்தியால் ஏகபாவமும் சித்திக்கிறது.

ஒன்றைக் கூறு போட்டு இரண்டு மூன்று என்று எவ்வளவுதான் வளர்த்திக் கொண்டு போனாலும் அவை யெல்லாம் ஒன்றின் பின்னங்களாகுமேயன்றி அபின்னமான ஒன்று தானாகா.

கூறுபாடு செய்யும் தொழிலை மேன்மேலும் செய்து கொண்டு போனல் பின்ன வஸ்து அணு வில் அணுவிலணுவாய்க் குறைந்து தேய்ந்து முடிவில் கூறுபாட்டுக் கிடமில்லாத பூரண சூந் நியத்தை யடைந்து அது தாண்டின விடத்தில் ஸ்வயம் பிரகாசமாய் விளங்கும் நித்திய பூரண நிராமயமான நிர்மல வஸ்துவின் ஸந்நிதானத் தையடைந்து காண்பான், காட்சி, காண்பொ ருள் என்கிற திரிபுடி பேதமும் அற்ற விடத்து அறியாமை யொழிந்து எல்லாம் அறிவுமயமாய் விளங்குகிறது.

ஆகையால் தீமையென்பது சாமான்ய ஜனங் கள்நினைப்பதுபோல் ஜீவனுக்குவிரோதமாய் ஏற் பட்டதோர் கெடுதியல்ல. ஜீவன் அவித்தியா ஸம்பன்னனுயிருக்கும் வரையில் அவித்தை யின் விளைவாகிய மனக்குறையை அவனுக்குக் காட்டி, அவனை நிறைவெய்தச் செய்வதற்கா ன ஒரு ஈசுவர கிருபாசாதன மன்றி வேறல்ல.

தீமை யுள்ள வரையில் ஜீவனுக்குத் திருப்தி யில்லை. பேதமுள்ள வரையில் தீமையும் ஒழி வதில்லை. இந்த பேதபாவனையை யொழிக்க வேண்டியதவசிய மென வற்புறுத்து வதற்காக ஏற்பட்டுள்ள ஒரு தூண்டுகோலுக் கொப்பாக உவமித்துச் சொல்வார் இந்தத் தீமை யென்ப தை.

"ஆள்வாரற்ற மாடாய்த்திரிந்த அறிவிலியை
மாள்வார் வலையிற் சிக்காது காக்க மருட்டி [விட்டு
ஆள்வான் தனிநினைந்தன் பாலழைப் பித்துக்
கேள்வியிலாத வள்ளுவன் கோயிலிற் கட்டி [னள் வல்லவளே!"

—'திருவூடல்'-துதி.(Godward Ho! XIII-90)

என்றபடி தீது என்றும் குறை யென்றும் குற்ற மென்றும் ஏற்பட்டுள்ள தெல்லாம் பூரண புராதனமாயுள்ளதினின்றும் மனிதன் வழுவி யுள்ளதை அறிவுறுத்த ஏற்பட்டதோர் ஈசுவர கிருபாசாதனமன்றி வேறல்ல. இதையே மாயை என்பர். இந்த மாயைகடந்த இடத்தில் தாயைத் தேடி அடைந்தால் எல்லாம் உள்ளங் கை நெல்லிக்கனிபோல் பிரத்தியக்ஷமாம்.

ஓம்தத்ஸத்.

---

## MODESTY—A KINDERGARTEN SONG.

**(The Story of the Jackdaw)**

### அடக்கம்—ஒருபாட்டு.

(பாலப்ருந்தாவனக் கும்மி.)

---

(வான்கோழி கர்வபங்கம்.)

1. பொன்னே பொன்னவிர் பூங்கொடியே-
பொற்பகமே உயர் கற்பகமே! [ஒரு
மின்னே மின்னிடை மேகநறுங்குழல்
விண்ணமு தென்னுமோர் பேண்ணமு [தே!

2. எண்ணும் உறுப்பிற் சிறந்த இருவிழி
பண்ணும் அறத்தில் பசிக்களித்தல்;
கண்ணும் பலகுணம் தன்னிற் சிறந்தது
காணும் அடக்கமே மாணிழையே!

3. கண்டி கடகம் கதிர்மணிச் சுட்டிவண்
தண்டை சிலம்பும் அணியல்லவே!
கொண்ட அடக்கமே ஒண்டொடி யாவர்
கூறும் அணியிது தேறுகவே. [க்கும்

4. உட்செருக்கால் வரும் துக்கம் பலவுள
ஓதுவேன் ஓர்கதை யீதுனக்கே
பட்சமுடன் கேள் பகர்ந்திடும் காதை [யைப்
பான்மொழியே எழில் மீன்விழியே.

5. காட்டகத்தே ஒருவான்கோழி அது
கானமயிலின் அழகு கண்டு
நாட்டமுற் றந்த அழகு தனக்குமே
நண்ணும் வகை ஏதென் றெண்ணியதே.

6. எண்ணிய பின்னம் மயில்கீள் கழித்தங்
கெறிந்த சிறகுகளைப் பொறுக்கித்
தன்னுட லெங்கும் சொழுந்தித் தரித்தது
தான்மயி லென்ன நினைத்ததுவே.

7. உள்ளில் மிகவும் கருவங்கொண் டாங்கு [தான்
உற்றவினம் தன்னை விட்டிகழ்ந்து
மெல்ல மயிலினத் துள்ளே புகுந்தது
மெச்சியே தன்சிற குச்சிதத்தை.

8. எத்தனை நன்று விளக்கினும் பொல்லாத
பித்தளை பொன்நிறம் உற்றிடுமோ?
மெத்தக் குளிப்பாட்டினுலும்கழுதைதான்
மேவும் குதிரைய தாய்விடுமோ?

9. ஆதலி னுலந்தக் கோழியின் உள்ளத்
தகந்தையைக் கண்டம் மயிலினங்கள்
ஏதெங் குலத்தைக் கெடுக்கவந்தாயோ [வென்
றெற்றிப் பறித்தச் சிறகை யெல்லாம்—

10. தங்கள் சிறகைப்பறித்த தல்லாமல் அ
தன் சிறகும்பறித் தங்கதனைப்
பங்கப் படுத்தி விடுத்தனவே, ஐயோ!
பாவம் விதிக்கென்ன பண்ணுவதே!

11. புண்ணினுல் அங்கம் பொதியப் புலர்ந்து [போய்ப்
புக்கது தன்னினத் தைக்கலந்து
எண்ணுது முன்னம் இகழ்ந்ததை ஓர்ந் [தவை
எட்டி யடித்துத் துரத்தினவே.

12. ஐயோ! சுருண்டு கலங்கி வருந்தல்கண்
டன்பினோர் கோழி அதையடுத்து
மெய்யைத் தடவிக்கொடுத்தோ ருபதே
மேவி யுரைத்ததே நாமறிய. [சம்

13. நின்கதிக் கேற்ற மதியோ டிருந்தாலிங்
நீசமும் க்லேசமும் நேர்ந்திடுமோ?
தங்கள் நிலையில் அடங்கியிராதவர்
தாம் படும் பாடிது தான் தெரியே!

14. ஆதலால் என்றும் அகந்தை கூடாது [காண்
அன்பும் அடக்கமும் இன்மொழியும்
ஆதரவும் தானே ஏதம் தவிர்த்தென
தன்னையே நல்கிடும் நன்னலமே.

15. பொன்னே பொன்னலர் பூங்கொடியே
பொற்பகமே உயர் கற்பகமே! [ஒரு
மின்னே மின்னிடை மேகந றுங்குழல்
விண்ணமுதே உயர் பெண்ணமுதே!

———:※:———

## A Man found in the Hollow of a Rock.

**(An illustration in Life of the sense-bound soul.)**

## "கல்லினுட்தேரை" போல் காணப்பட்ட மனிதன்—ஒருண்மைச்சம்பவம்.

——(:o:)——

(ஜீவன் தேஹத்தில் பெத்தனுயிருப்பதை யுணர்த்துமோர் உதாரணம்.)

I

ஹாங்காங் பட்டணத்திற்கருகேயுள்ள ஒரு மலைத்தொடரில் அதற்குக் கீழேயுள்ள போலீஸ் ஸ்டேஷனுக்கு 500 அடி உயரத்தில் "கல்லினுட் தேரைபோல்" ஒருமனிதன் அக்குன்றினில் தோன்றிய போக்கு வரத்துக்கு வழியில்லா ஒரு பொந்தில் இருக்கக் காணப்பட்டான். அங்கே வேலை செய்துகொண்டிருந்த புல்லறுக்கும் கூலியாட்கள் கல்லினுள்ளிருந்து மனிதன் குரல் கேட்கக்கண்டு ஆச்சரியப்பட்டு பயந்து, அது உண்மையென்று தீரத்தெளிந்த பின் அதைப்பற்றி போலீஸாருக்குத் தெரிவித்தார்கள். அந்த மனிதன் உள்ளே சாய்ந்தவண்ணமயாய்ப் படுத்திருந்தான். கையைக் காலை அசைக்கமட்டும் கொஞ்சம் இடமிருந்தது. அப்பாறையின்மேல் சில பிளவுகள் காணப்பட்டன; ஆனல் அவை பெரிதாகவில்லை. அவற்றில் ஒன்றுமட்டும் ஆறங்குல அகலமுள்ளதாயிருந்

தது. மற்றவையெல்லாம் அஃதிலும் சிறிய வையே அவன் அதற்குள் எப்படி அகப்பட்டுக்கொண்டான் என்பதுதான் தெரியவில்லை. அவனைக்கேட்டதில் 'பிசாசு என்னை இங்கே கொணர்ந்துவிட்டது' என்றுமட்டும் சொன்னான். வேறு ஒன்றும் சொல்லவில்லை. பெரிய பெரிய போலீஸ் உத்யோகஸ்தர்களும் இஞ்சினீர்களும் போய் அவனை விடுவிக்கப்பார்த்தார்கள். ஒருவராலும் சாத்தியப்படவில்லை. ஏனெனில் கீழும் மேலும் சுற்றிலும் ஒரே கற்பாறை மூடியிருந்தது. அதை வெடி மருந்து கொண்டு தகர்த்தால்தான் தகர்க்கலாம். மற்றப்படி முடியாது என்று சொல்லிவிட்டார்கள். அவனுக்கு யாரோ ஆகாரம் கொடுத்து வந்தாப்போலிருக்கிறது. ஏனெனில் அவனுக்குப் பசிதாகத்தாலுண்டாகும் வேதனையில்லை. அவன் தலையருகே ஒரு மலையூற்றுக்கசிந்து நீர் ஓடிக்கொண்டிருந்ததால் தாகம் அவனைப்பாதிக்க இடமில்லையென்கலாம். அதனை விடுவிடுக்க வழியின்றி அவன் அங்கேயே யிருந்துவந்தான். எல்லாரும் போய் இதென்ன அற்புதம் என்று பார்த்துவந்தார்கள். பிறகு வெல்மிங்டன் கப்பலிலிருந்து அவனைப் பார்க்கவந்த மாலுமிகள் அவனுக்குச் சேதமின்றி கற்பாறையைப் பிளந்துதள்ளி அவனைத் தூக்கிவிட்டார்கள். கல்லினுட்தேரைபோல் அங்கிருந்தவன் பைத்தியக்காரனென்றுஸெர்டிபிகேட் செய்யப்பட்டவனு யிருந்தானும். இந்த அதிர்சயத்தை எல்லாரும் கண்டும் கேட்டும் இதன் உளவு தெரியாமல் விழிக்கிறுர்கள்.

* * *

II

பைத்தியக்காரனுக்கு தலையில் பித்தேறி மூளை உருகிப்போவதுண்டு. இந்த தேஹம் பிராணசக்தியிலிருந் துண்டானதால், இதை மறுபடியும் பிராணமயமாகவே மாற்றிக்கொள்ளலாமென்பது வித்தபுருஷர்கள் அனுபவரீதியாய்க்கண்டுள்ள உண்மை. அன்னமயகோசத்தைப் பிராணமயமாகச் செய்துகொள்வது சாத்தியமே, மிகவும் கஷ்ட சாத்தியமாயிருப்பதால் அதை அசாத்தியமென்று சொல்வதற்கில்லை. அந்தப் பாறையினுள்ளிருந்தவன் பித்தனே சித்தனே நாமறியோம். பித்தனென்று ஸெர்டிபிகேட் செய்யப்பட்டிருப்பதாகச் சொல்வதால் அப்படியே வைத்துக்கொள்ளலாம். அவனுக்குப் பசியாறவென்று 'பிஸ்கோத்' கொடுத்தபோது அவன் அதை வேண்டாமென்று திருப்பிவிட்டானும். ஆகாரத்துக்கு என்ன செய்கிறுயென்று கேட்டதற்குப் பிசாசு தன்னைப் போஷித்து வருவதாகச் சொன்னுனும்: பிராணேபாசனையில் முதிர்ந்தவர்களுக்கு அதற்குக் காரணமாகிய மனதின் வழியே பிராணன் செல்ல தேஹமும் உதிர்ந்த புட்டுப்போல் அதன்பின்னே செல்லும் என்பார்கள். 'மன்னனமெங்குண்டு வாயுவுமங்குண்டு'' என்பதுதிருமந்திரோபதேசம். சித்தர்கள் காற்றுய்ப் பறப்பார்கள் என்பதற்கு அர்த்தம் அவர்கள் அன்னமய கோசத்தைப் பிராணமயமாக மாற்றிக்கொண்டு வேண்டியபோது உருவெடுத்தும் உருக்கலைத்தும் இஷ்டம்போல் வசிப்பார்கள் என்பதே. இது உண்மையென்பது சத்தியம். தாயுமானவர் 'வித்தகச் சித்தர்கணமே'' யென்று பாடியிருப்பதிலிருந்து சித்தர்கள் கூட்டம் இருக்கவேயிருக்கிறதென்பது நிச்சயமென நம்புவார்கள் ஹிந்துக்கள். மற்றவர் நம்பமாட்டார்கள். யார் எதை நம்பினுலும் நம்பாவிட்டாலும் உண்மைக்கு ஒருநாளும் குறைவு இல்லை. சித்தர்கள் கல்லறையில் போட்டு அடைக்கப்பட்டிருக்க அவர்கள் கல்லறை மூடினது மூடினபடியிருக்க அதைவிட்டு வேறு இடங்களுக்குச் சென்றுலாவி ஸதேஹிகளாய்த் திரியக் காணப்பட்டிருக்கிறுர்கள்.

''கேவலகும்பக'' ஸித்திபெற்றவர்கள் அன்னமயகோசத்தைவிட்டுப் பிராணமயகோசத்திலே வசிக்கலாம். வசிக்கிறுர்களென்பது உண்மை. கல்பசாதனங்களும் ஹடயோக அப்பியாஸங்களும் செய்து தேறினவர்கள் தேஹத்தை அப்

பிஹுப்புப்போல் பிராணமயமா யிருப்பதிலிருந்து அன்னமய மாக்குவார்கள். இது ஒரு அதிசயமில்லை. ஏனெனில் பிராணன் கூட்டை விட்டுப் பிரிந்தால் இத்தேகம் தானே பஞ்ச பௌதிகங்களாகப் பிரிந்து போகிறது. பிரகிருதி சுபாவத்திலுள்ளது எதையும் காலவஞ்சனம் செய்தவர்கள் காலபேதத்தால் தலை கீழாகவும் கால் மேலாகவும் மாற்றலாம். ஒரு நிமிஷத்தை ஒரு யுகமாகவும் ஒரு யுகத்தை ஒரு நிமிஷமாகவும் மாற்றலாம். மனோவியாதி கொண்டவர்களுக்கும் காமவியாதி கொண்டவர்களுக்கும் இப்படி நிகழ்வதை நாம் நித்தியம் காண்கிறோம். ஆகையால் காலதவணை மனத்தைப் பொருத்தது: ஒரு மனிதன் சூரியோபாசனை செய்து ஸித்தி பெற்றால் ஒரு நாளைக்குக் கணக்காய் 21,600 சுவாஸம் விடுகிறான். இதுவே தேவாயனப்படி பிரபவாதிஸம்வத்ஸரநாமங்கள் அறுபதுமாகிறது. ஒவ்வொரு சுவாசமும் ரேசக பூரக கும்பகமென மூவகைத்தொழில் சேர்ந்ததாயிருக்கிறது. ரேசகம்=நிசுவாசம்; பூரகம்=உசுவாசம்; கும்பகம்=உள்ளும் புறமும் பூரணமாக நிற்றல். உசுவாசம் (பூரகம்) செய்து கும்பத்தால் (பூரணமானால்) நாடி நரம்புகளிலெல்லாம் பிராணன் புகுந்துகொண்டு அவைகளை விரியச் செய்யும். நிசுவாஸம் (ரேசகம்) செய்து கும்பத்தால் (பூரணமானால்), பிராண சக்தி வெளியிலிருந்து அந்த நாடி நரம்புகளை அமுக்கிப் பிசைந்து வலுவுறச் செய்யும். நன்றாக இடித்து பக்குவம் செய்யப்பட்ட உளுத்தமா(அப்பளத்துமா) வினால் வெகுலேசான அப்பளம் இடலாம். அது எண்ணெயில் போட்டுப் பொரிக்கப்படும்போது இன்னமும் அதிகமாய் விரியும். அஃதேபோல் ரேசகபூரக கும்பகங்களினால் நாடி நரம்புகள் விரிந்து குவிந்து சுத்தப்படுகின்றன. நாடி நரம்புகள் விரிந்து குவியும் சக்தி வாய்ந்திருப்பதே பிராணவோட்டமாகிய "நாடி நடைக்குக்" காரணம். இது வாதபித்த சிலேஷ்மமென்று மூவகைப்படும்.

III.

(1) வாதம் குதிரை நடை நடக்கும்.

(2) பித்தம் கோழிநடை நடக்கும்.

(3) சிலேஷ்மம் பாம்பு நடை நடக்கும்.

வாதம் வாயுவம்சம்.

பித்தம் அக்னியம்சம்.

சிலேஷ்மம் அப்பு(ஜல) அம்சம்.

இந்த தேகம் நிலம், நீர், தீ, கால் என்று சொல்லும் பிருதிவி, அப்பு, தேயு, வாயு அம்சங்களாலாயது.

பிருதிவியை அப்புவிலும் (ஜலத்திலும்), அப்புவை தேயுவிலும் (அக்னியிலும்), தேயுவை வாயுவிலும் (காற்று, பிராணனிலும்) கரைக்கலாம், அதாவது ஒடுக்கலாம். பிரவிருத்திக் கிரமத்தில், வாயுவிலிருந்து அக்னியும் (தேயுவும்), அக்னியிலிருந்து (அப்பு) ஜலமும், அப்புவிலிருந்து உப்பு அம்சமாகிய பிருதிவியும் உண்டாகும். பிராணாயாமஸித்தியினாலே இந்தப் பூதபௌதிகங்கள் ஒன்றிலொன்று ஒடுங்கவும், ஒன்று மற்றொன்றாய் விரியவும்செய்யலாம். மின்சார சக்தியினால் ஜலத்தை 'ஆக்ஸிஜன்' (அக்னிவாயு) உஷ்ணம், 'ஹைட்ராஜன்' (ஜலவாயு, சீதம்) என்னும் இருவாயுக்களாகப் பிரிக்கலாம்போல், பிராணசக்தியால் தேஹத்திலுள்ள உப்பு அம்சங்கள் (கடினவஸ்துக்கள்) ஜலத்திலும், ஜல அம்சங்கள் (திரவபதார்த்தங்கள்) தேயு வாயுக்களிலும் கரையும் படிக்கும், கரைந்தது திரண்டுகூடி உருவாகும்படிக்கும் செய்யலாம். இதற்கு நாடி சுத்தியும் பிராண சுத்தியும் அவசியம். நாடி சுத்தியுண்டானால் தேஹ சுத்தி தானே யுண்டாகும். ஹிருதயசுத்தி (தஹரோபாஸனையால் ஸித்திக்கும் மனோசுத்தி) யுண்டானால் பிராணசுத்தி தானே லபிக்கும். மேலிருந்து கீழ் இறங்குவதும், கீழிருந்து மேல் போவதும் சகஜம். அன்னமயம், பிராணமயம், மனோமயம் என்கிற மூன்று கோசங்களும் சுத்

தப்பட்டால் இத்தேஹம் நீர்கொண்ட மேகம்
போல் ஆவியாகவோ மழையாகவோ, பயிர்
பச்சையாகவோ முறையே மாறும் தன்மைய
தாகும். திடீரென்று மின்னல் தாக்கப் பெற்ற
வர்கள்தேஹம் கட்டுவிட்டுக் கரைந்துருகி மறு
படியும் சேர்ந்திருப்பதையும் அந்த சம
யத்தில் எதிரிலிருந்த வஸ்துக்களின் உரு
வம் பொடகிராப் படம் பிடித்தது போல்
அந்த இடத்தில் பதியப் பெற்றிருப்பதையும்
பார்த்து மேற்றிசை சாஸ்திரக்ஞர்கள் ஆராய்
ச்சி செய்திருக்கிறார்கள். மின்சாரம் தேஹத்
தைத் தஹிப்பதும் கெடுப்பதும் ஒரு அளவு
பற்றி யுள்ளவரையில்தான். அவ்வளவுக்கு மிஞ்
சிப்போனால் மின்சாரம் தேஹத்தை ஊடுருவிச்
செல்வதுகூடத் தெரியாது. தேஹத்தில் மஷ்டு
(மலம்) உள்ளவரையில் அதற்கு ஆபத்துண்டு.
மஷ்டு நீங்கி நிர்மலமானால் அது நிராமயமா
கும். (வியாதியற்றதாகும்).

IV.

இப்படி யெல்லாம் இந்த தேஹத்தைக் கல்லி
னுட் தேரைபோலும் கருவினுட் சிசுவைப்
போலும் வளர்த்துக் காத்து அழிக்கத்தக்க
சக்தி யொன்றிருக்கிறது. அதற்குத்தான்
'ஆத்ம சக்தி" யென்று சொல்லுகிறது. அதா
வது அறிவின் சக்தியாகும். இது அறிவு
அறியாமையென இருவகைப்படும். தன்னைத
தானறிந்திருத்தல் அறிவு; தன்னைத்தானறியாது
மற்றப் பிரகிருதி தத்துவங்கள் யாவற்றையு
மறிந்திருப்பது அறியாமை. இதைத்தான்
ஆஜ்ஞா சக்தி யென்றும், இது துலங்குமிடத்
தை ஆஜ்ஞா சக்ரம் என்றும் சொல்வது.

முன்னதை ஆணறிவு என்றும் பின்னதைப்
பெண்ணறிவு என்றும் கூடச்சொல்லுவர் பெரி
யோர்.

"ஆண், பெண்" என்கிற பால் வேற்றுமை
யே மாயா ஜாலத்துக்கெல்லாம் காரணம். ஆண்
பெண் ணொற்றுமையினால் மாயை (மனக்குழப்
பம்) நீங்கும். ஆண்=அறிவான்; பெண்=அறி
பொருள். ஆணுக்கும் பெண்ணுக்கும் மத்தியில்
அவ்விரண்டின் உறவுருவாய் நிற்பது அறிவு.
இப்படித் திரிபுடிமாத்திரமாய் விளங்கும்
ஞானமே பந்தமோக்ஷமிரண்டுக்கும் காரணம்.
திரிபுடி மயக்கம் தீர்ந்தால் மனத்தெளிவும்,
திரிபுடி மயக்கமுண்டானால் மனக்குழப்பமும்
உண்டாம். சாஸ்திர ஞானம் உலக ஞானம்
எல்லாம் திரிபுடி ஸஹிதமானதென்பர். திரிபுடி
ஞானம் இல்லாமல் உலகத்தை அறியமுடி
யாது. ஆத்ம ஞானம், அதாவது, தான் இந்த
உலகையெல்லாம் அறியும் அறிவுக்கறிவாயிருக்
கிறதை யுணர்ந்து உறுதியுற்றிருப்பது திரிபுடி
ரஹிதமானதாகும்.

கல்லினுட் தேரைபோலிருந்த மனிதன்
அதனுட் சென்றிருந்தும் வெளிவரத் தெரியா
மல் அங்கேயே யிருந்ததுபோல் ஜீவனும் இத்
தேஹத்துட் புகுந்து வெளிப்படத் தெரியாம
லிருக்கிறான். வெல்லிங்டன் கப்பல் மாலுமி
களைப்போல் யமதர்மராஜா காலாந்தரத்தில் இத்
தேஹத்தைத் தகர்த்து ஜீவனைத் தூக்கிக்
கொண்டுபோகிறான்.

---

## Dayanandar.

### Chapter III.

### தயாநந்தர்.

### அத்தியாயம் 2.

### கற்பனை.

பதுமைக்கும் இந்தக் கொலைக்கும் என்ன
"லார்" ஸம்பந்தம்என்று திகைத்தார் தயாநந்தர்.
இந்த நீலப்பதுமைகளைத்தான் சொன்னேன் எ
ன்று துப்பறியும்உத்தியோகஸ்தர் சுந்தரம்தயாந
ந்தர் மேஜையின் மேல் மண்ணினால் மனிதனைப்
போல் செய்யப்பட்டு நீல வர்ணம் கொடுக்கப்
பட்டு ஆறு அங்குலம் நீளமுள்ள இரண்டு பது
மைகளை வைத்தார். அந்தப் பதுமைகளின்
மாரின்மேல் சூரியபிம்பம எழுதப்பட்டிருந்
தது. அப்பதுமைகள் பூர்வகாலத்தவர்களின்

வேலைப்பாடு என்பதற்கு சந்தேகமில்லை. முன் காலத்தவர்கள் செய்தபதுமைகளுக்கும்இப்பொழுதுதான் நடந்த கொலைக்கும் சம்பந்த மென்ன இருக்கக் கூடுமென்பது தயாநந்தருக்கு ஆச்சரியமாயிருந்தது.

இது நம்முடைய முன்னோர்கள் வேலைப்பாடு உமக்கு எங்கே கிடைத்தது என்று வினவினார் தயாநந்தர்.

ஒன்று கூவம் ஆற்றங்கரையில் கொல்லப்பட்ட ஸ்திரீயின் மடியிலும் இன்னொன்று இருளப்பன் சந்தில் கொல்லப்பட்ட செஞ்சடையனுக்கருகிலும் அகப்பட்டது. செஞ்சடையன் கொலைக்கும் ஸ்திரீயின் கொலைக்கும் ஏதாவது சம்பந்த மிருக்கு மென்று நம்புகிறேன் என்றார் சுந்தரம்.

"எல்லாம் ஆச்சரியம்தான். பதுமைகளின் அர்த்தத்தைக் கண்டுபிடித்துவிட்டால் செஞ்சடையன் கொலைக்கும் ஸ்திரீயின் கொலைக்கும் காரணம் கண்டுபிடித்துவிடலாம்." என்றார் தயாநந்தர்.

"ஆம்! உமக்கு அவைகளைப்பற்றி ஏதாவது தெரியுமோ?"

"எனக்குத்தெரியாது. ஆனால் மிகவும் படித்தவரான சாஸ்திரக்ஞர் ஒருவரைத்தெரியும். அவருக்கு ஒருவேளை இப்பதுமைகளின் அர்த்தத்தை சொல்லத்தெரியலாம்."

"சரி. இதைக் கொண்டுபோய் சாஸ்திரக்ஞரிடம்கொடுத்து அதன் அர்த்தத்தைக்கேட்டு வாரும்." என்று ஒரு பதுமையை தயாநந்தரிடம் கொடுத்தார்.

"இப்பொழு உமக்கு வேண்டியதை எல்லாம் நீர் தெரிந்து கொண்டுவிட்டபடியால் நான் கேட்பதற்கு பதில் சொல்லவேண்டும்." என்றார் சுந்தரம்.

"ஆகா." என்றார் தயாநந்தர்.

சனிக்கிழமை ராத்திரி வசந்தோத்தியானத்தருகில் செஞ்சடையனைப் பார்த்தது முதல் இருளப்பன் சந்தில் அவன் பிரேதத்தைப்பார்த்தது வரையிலுள்ள விருத்தாந்தத்தைச் சொல்லும் என்றார் சுந்தரம். தயாநந்தர் தான் செஞ்சடையனைப் பார்த்தது முதற்கொண்டு நடந்தவைகளை ஒன்றுவிடாமல் சொன்னார்.

நடுவில் சுந்தரத்துக்கு சில சந்தேகங்கள் உண்டாக அவைகளை தயாநந்தரைக் கேட்க தனது புஸ்தகத்தில் குறித்துக் கொண்டார். குறித்துக்கொண்ட பிறகு தாயாநந்தரைப்பார்த்து "செஞ்சடையன் ஒரு பெரிய மனுஷனைப் போல் தோற்றின னல்லவா?"

"ஆம். பார்வையிலும் நடத்தையிலும் ஒரு பெரிய மனிதனைப்போலவே தோன்றினான்."

"அவன் முதலில் எப்பொழுது உம்மோடு பேசினான் பன்னிரண்டுமணி அடித்து கொஞ்ச நாழிகைக்கெல்லாம் வசந்தோத்தியான வனத்திலிருந்து இருளப்பன் சந்துபோக உமக்கு எவ்வளவு நேரம் பிடித்தது?"

"கிட்டதட்ட பத்து நிமிஷம். அவன் என்னை விட்டு வண்டியில் ஏறின பொழுது பன்னிரண்டு அடித்து இருபது நிமிஷமிருக்கும்."

"உம்மை ஏமாற்றுவதற்காக விட்ட வண்டியைத் தொடர்ந்து போனீரே, போய் இருளப்பன் சந்திற்குத் திரும்பி வரும்பொழுது என்ன மணி?"

"சரியாய் ஒரு மணி இருக்கும். ஏனென்றால் நான் தொடர்ந்துபோன வண்டிக்காரன் மணி ஒன்றாயிற்றென்றும் அதனால் தான் வீட்டுக்குப் போவதாகவும் சொன்னான்."

"ஆனால் பன்னிரண்டரை மணிக்கும் ஒருமணிக்கும் நடுவில் செஞ்சடையன் கொலை செய்யப்பட்டிருக்க வேண்டும்."

"ஆம். நானும் வண்டிக்காரனும் செஞ்சடையன் பிரேதத்தை பார்த்தப்பொழுது ஒரு மணி அடித்துக்கொஞ்சம்நாழிகை இருக்கும்" என்றார் தயாநந்தர் நடுங்கிக்கொண்டு.

"செஞ்சடையன் உம்மோடு தாராளமாய் நடந்துகொள்ளவில்லையென்று நினைக்கிறேன்."

"சந்தேகமில்லாமல் உள்பையில்கையைப்போட்டுக்கொண்டு ஒரு கஜம் பின்னாலேயே மெதுவாக நடந்துவந்தான்."

"அவன் உள்பையில் வைத்திருந்தது கைத்துப்பாக்கி. அது அவனை சோதித்தபொழுது அகப்பட்டது. ஆனால் அவன் கொண்டுபோனவைகளை மாத்திரம் காணோம்."

"அவன் கொண்டுபோனது என்ன?"
"நகை,பணம்,பத்திரம்,இம்மூன்றுகளில்ஒன்று"

இம்மூன்றுகளில் ஒன்றைக் கொண்டுபோனான் என்று நினைப்பதற்கு என்ன காரணம்? இல்லாவிட்டால் கைத்துப்பாக்கி என்னத்திற்கு? இது தெரியவேண்டாமா ஐயா!' என்றார் சுந்தரம்.

"கைத்துப்பாக்கி இருட்டில் தன்னைக்காத்துக் கொள்வதற்காக இருக்கலாமா? எளியவனைப் போல் வேடம் தரித்திருக்கிறவனை யார் என்ன செய்யப்போகிறார்கள். ரோந்து சுற்றும் போலீஸ்காரன்தான் பார்ப்பான். தான் பெரிய மனிதன் என்பது தெரியக்கூடாதென்று மாறு வேடம் போடுபவன் போலீஸ்காரனை சுடமாட்டான். ஏனென்றால் அவன் பிடிக்கப்பட்டு எவருக்கும் தெரியக்கூடாதென்று மறைத்து வைத்திருக்கும் அவன் பெயரும் அந்தஸ்தும் வெளிவரும். இக்கற்பனை சரியாயிருந்தால்தான் பதுமையின் சம்பந்தம் தெரியவருகிறது."

"பதுமைக்கும் இக்கொலைக்கும் என்ன சம்பந்தம்?"—"சொல்லுகிறேன் கேளும்."

"செஞ்சடையன் இருளப்பன் சந்தில் வந்த ஸ்திரீயினிடம் தான் கொண்டுவந்திருந்த பணம், நகை, பத்திரம் இம்மூன்றுகளில் ஒன்றைக் கொடுத்தான். தற்காலத்துக்கு நகை என்று வைத்துக்கொள்வோம். நகையை வாங்கிக்கொண்டு அந்த ஸ்திரீ பதுமையை இவனிடம் கொடுத்தாள்."

"என்னத்திற்காகக்கொடுத்தாள்?"- 'தான்நகையை வாங்கிக்கொண்டதற்கு அடையாளமாக!'

"செஞ்சடையன் அதை பையில் போடுகையில் மாரில் குத்தப்பட்டிருக்கிறான். அவன் அதை தடுக்கப்போய் ஸ்திரீயின் முந்தாணியை பிடித்திருக்கிறான். ஆனால் காயம் மரணகாயமாதலால் கீழே விழுந்து இறந்திருக்கிறான். அதனால்தான் பதுமை அவனுக்கருகில் அகப்பட்டது."

"சரி. ஸ்திரீயினிடம் அகப்படக் காரணம்."

"அவள் செஞ்சடையனைக்கொலைசெய்த பிறகு கூவங்கரை போயிருக்கிறாள். அங்கு வந்திருந்தவன் அவளிடமிருந்து நகையை வாங்கிக்கொண்டு அதற்கு அடையாளமாக அப்பதுமையைக்கொடுத்திருக்கிறான். பதுமையை வாங்கிக்கொண்டு அவள் திரும்புகையில் கொல்லப்பட்டிருக்கிறாள். கொன்றவன் சவத்தை கூவம் ஆற்றங்கரையில் தள்ளிவிடப் பார்க்கையில் தடுக்கப்பட்டு ஓடிவிட்டான்."

"செஞ்சடையனுக்குப் பதுமை கொடுத்தவளிடம் ஏன் இன்னொருபதுமை இருந்திருக்கக்கூடாது?"—"என் கற்பனை சரியாயிருந்தால் அப்படியில்லை."

"சரி. தனக்கு வேண்டியதை வாங்கிக்கொண்டவன் ஏன் கொலை செய்யவேண்டும்? அதைக் கண்டுபிடித்துவிட்டால் கொலையாளியைக் கண்டுபிடித்து விடலாம்."

"சரி. கொலையைககண்டுபிடிக்கப்பார்ப்போம். தயாநந்தரே நீர் அப்துல்லா சாயபு கடைக்குப் போய் ஜ. மோ. என்ற எழுத்துகளையுடைய குடைத்துணி யாருக்காக தைக்கப்பட்டது என்று கேட்டு வாருங்கள். அப்படியே பதுமையைப் பற்றி ஏதாவது தெரிந்தால் கேட்டுவாருங்கள். நான் வண்டிக்காரனை விசாரிக்கிறேன்."

"எந்த வண்டிக்காரனை?"
"மூன்றாவது வண்டிக்காரனை."
"அவனுக்கு என்னதெரியும்?"

"செஞ்சடையனைக்கொன்றஸ்திரீ அவ்விடத்தை விட்டுப்போவதற்கு அவ்வண்டியில்தானே ஐயா போயிருக்கவேண்டும்."

"என்ன ஐயா அது! நீர் சொல்வது ஆச்சரியமாயிருக்கிறது. கொலை செய்தவள் வண்டியில் ஏறுவாளா? ஏறினால் வண்டிக்காரன் அடையாளம் பார்த்து சொல்லமாட்டானா?"

"என்ன ஐயா, கொலையாளி கொலைசெய்த இடத்தை விட்டு ஓடப்பார்க்க மாட்டானா! அவசரத்தில் அதைப்பற்றியெல்லாம் நினைப்பானா என்ன! அதுவுமில்லாமல் இக்கொலைசெய்தது ஒரு ஸ்திரீ."

"சரி! அப்படியிருக்க ஸ்திரீயைக் கொன்றது மனிதன் என்று என்னமாய்த் தெரியும்?"

"ஒரு புருஷனுக்காகவன்றி ஸ்திரீ இவ்வளவு துணிகரமாய் செய்யமாட்டாள். எல்லாவற்றிற்கும் 999 சாலை தெருவில் மாலை 4 மணிக்கு என்னைவந்துபாரும்" என்று சொல்லிப் போய்விட்டார் சுந்தரம்.

——:*:——

## MONKEYS—A STUDY.

(BY A STUDENT.)

### வானரங்கள்.

வானரங்களைப் பற்றிப் பேசுமுன் வானரங்களுக்கும் மனிதனுக்கும் ஏதாவது சம்பந்தமுண்டாஎன்றுபார்ப்போம். டார்வின்,லாமார்க் எனும் பண்டிதர்களுடைய கொள்கையானது மனிதன் வானரத்திலிருந்து உற்பத்தியானான் என்பது. எப்படி என்றுபார்ப்போம். லாமார்க் பண்டிதர் மனிதர் சிம்பான்ஸி என்னும் வானரத்தை ஒத்திருந்ததாக அபிப்பிராயப்படுகிறார். பண்டிதர் ஹக்ஸ்லி வரைந்திருக்கும் கிப்பன், ஓராங், சிம்பான்ஸி, கரில்லா, மனிதன் எலும்புக் கூடுபடத்தை வாசகர்கள் சௌகரியத்துக்காக இங்குவரைவோம்.—



கிப்பன் ஓராங் சிம்பான்ஸி கரில்லா மனிதன்

இப்படத்தில் மனிதன் தேகமும் மற்ற வானரங்களின் தேகங்களும் ஒவ்வொரு எலும்பும் ஒத்திருக்கின்றன. முதுகெலும்பு, இருதயம், ஸ்வாஸாசயம், ரத்தம், தசை, நரம்பு முதலானவைகளும் ஒத்திருக்கின்றன. மனிதனுடைய முதுகெலும்பின் கடைசி பாகத்தில் முனையாயிருப்பதுமுன் அவனுக்கு வாலிருந்ததற்கு அடையாளமாம். பைத்தியம், ஜலதோஷம், ஜன்னி, பேதி முதலியவைகள் மனிதனை உபத்திரவப்படுத்துவதுபோல்மேற்காட்டியவானரங்களையும் உபத்திரவப்படுத்துகின்றன. காபி தேயிலை, புகையிலை, இவைகள் மனிதனுக்கு

எவ்வளவு பிரீதியோ அவைகளுக்கு அவ்வளவு பிரீதி. இப்படி மனிதனுக்கும் வானரங்களுக்கும் அநேக ஒற்றுமை இருக்கிறபடியால் வானரங்களிலிருந்து மனிதன் உண்டானுன் என்று டார்வின் முதலானவர்கள் அபிப்பிராயப் படுகிருர்கள். மனிதன் தொடக்கத்தில் வானர ரூபத்தில் காணப்பட்டான் என்பது மிகவும் வியப்பாகத்தானிருக்கிறது. ஆகிலும் நம்முடைய ராமாயணத்தில் வானர சேனைகள் ஸ்ரீ ராமரைச் சுற்றி சண்டை செய்தார்கள் என்று சொல்லும்பொழுது வானர சேனை என்பது வானர ரூபத்தில் காணப்பட்ட மனிதச் சேனையோ வென்று ஊகிக்க இடமுண்டு. ஆகவே மனிதன் வானரத்திலிருந்து உற்பத்தியானுன் என்பதை ஒருவாறு தீர்மானிக்கலாம். அப்படித் தீர்மானிப்பதற்காதாரமாயுள்ள பிரமாணத்தைக் கூறுவோம். ஒருவனுற் செய்யப்பட்டு குறையாய் நிற்கும் வேலையை மற்ருெருவன் ஆதி முதலிலிருந்து ஆரம்பிக்காமல் தனக்கு முன்னிருந்தவன் விட்டது முதல் ஆரம்பித்து முடிப்பது போல, பெற்ருேரின் தேகம் எவ்வளவு மட்டும் வேறுபடுகிறதோ அவ்வளவு வேறுபாட்டினையும் அவரது சந்ததிகள் * வம்சபாரம்பரிய தத்துவத்தின்படி பெறுவதுமல்லாமல் அதற்குமேல் சுற்றியிருக்கும் நிலைகளுக்குத் தகுந்தபடி புதிய சில வேற்றுமைகளையும் அடையும் என்பது எல்லாருக்கும் தெரிந்த சங்கதி. ஆகையால் வானரம் வேறுபட்டுப்பல்கிச் சிறிது சிறிதாக மனிதச்சாயைகளை அடைந்து கடைசியில் மனிதன்வேறு, வானரம் வேறு என்று சொல்லத் தக்கபடி மனித ரூபத்தை அடைந்தது என்பதேயாம்.

வானரம் நாலுகால்களாலும் நடக்க மனிதன் மட்டும் இருகால்களால் நடப்பதற்கு காரணமென்ன? வானரங்களிலிருந்து மனிதன் பல்கிவரும்பொழுது வானரங்களின் மண்டை யோடுகளுக்கடியில் (1-ம் படத்தைப் பார்க்க) சுழிமுனை நாடி நுழைவதற் கேற்ற துவாரம் பின் பக்கத்திலிருக்க, மனிதன் மண்டை யோட்டுக்கடியில் சற்று முன்னிருக்க காணலாம். அப்படி முன்பக்கத்தில் துவார மிருப்பதால் முதுகெலும்பு அவன் தலையைத் தாங்கிக் கொண்டு தேகத்தை சாய்த்துக்கீழே தள்ளாமல் நேராக நிற்க அனுகூலப்படுகிறது. மனிதன் கை வானரத்தின் கையைப்பார்க்கிலும் பல்கிவளர்ந்த விசெஷத்தால் மிக்க உபயோக முள்ளதாய் இருப்பது விளங்கும்.

2-ம் படம்.



கை கால்

சிம்பான்ஸி.

இப்படத்தில் சிம்பான்ஸி என்னும் வானரத்தின் கையும் காலும் ஒன்றுபோலிருக்கின்றன. மேலும் வானரத்தின் கட்டைவிரல் சிறுத்து மற்ற நாலு விரல்களையும் எதிர்க்க சக்தியற்றுளது. மனிதன் கட்டைவிரலோ பெருத்து மற்றக் கட்டை விரல்களை நன்ருய் எதிர்க்கும் வல்லமையுள்ளதா யிருக்கிறது.

இப்பொழுது தேகம் சம்பந்தப்பட்டமட்டில் டார்வின்கொள்கைப்படி மனிதன் வானரத்திலிருந்து உற்பத்தியானுன் என்றகொள்கைக்கு வந்தோம். ஆனல் மனம் நினைவு எண்ணம் என்பனவெல்லாம் எதிலிருந்து உற்பத்தியாயின? வாலேஸ் என்னும் ஒரு பண்டிதர் மனதை மனிதனுக்கு தெய்வம் கொடுத்தது என்று வெகு

* Principle of Heredity.

லேசாய் சொல்லிவிட்டார். ப்ரூமன் என்னும் பண்டிதரோ பனமும் கீழினத்திலுள்ள பிராணிகளிடத்திலிருந்து பல்கி வந்ததேயொழிய வேறன்று என்று சாதிக்கிறார். அதற்கு அனுகூலமாக ஸ்பென்ஸர் என்னும் வித்வான் முற்கூறிய வம்ச பாரம்பரியதத்துவம் மனதிற்கும் பொருந்தும் என்று கூறி இவ்வாறு மனது வித்தியாசப்படுதலை மூளைமாறுதல் என்றழைப்பர்.

ஆகவே தேகவிஷயமாய்ப் பார்க்குமிடத்தில் மனிதன் வானரத்திலிருந்து பல்கினன் என்றும் மனதை கவனிக்கும்பொழுது வெவ்வேறு காரணங்கள் ஏற்படுகின்றன என்றும் அறிகிறோம். முதல் படத்தில் காட்டப்பட்டிருக்கிற கிப்பன், ஓராங், சிம்பான்ஸி, கரில்லா என்னும் வானரங்களைப்பற்றி அடுத்த சஞ்சிகையில் சொல்லுவோம்.

---

## The Multi-Millionare's Secret, or That which money cannot buy.

### A Dasara Story.

### கோடிசுவரன் குறை

அல்லது

(ஒரு தசராக் கதை.)

---

### I

ஆதித்தியன் அர்ச்சாதி மார்க்கத்தில் நடந்து தேவாயனமாகிய உத்தராயணம் முடிந்துவிட்டது. வியாசபௌர்ணமியும் வந்துவிட்டது, திருவான்மியூரிலே தியாகராஜர் வியாசருக்குத் தன்னுடைய அற்புத நிருத்தக்காட்சியளித்து பக்த கோடிகளை மனங்களிக்கச் செய்து கொண்டிருக்கிறார். ஜனங்கள் கண்கொள்ளாக் காட்சியாக தியாகேசர் செய்யும் நடனத்தைப் பார்த்துக் களிக்கிறார்கள். இரவு 12-மணியாய் விட்டது. பால்போல் சந்திரன் நிலவு காய்கிறது. ஜனங்கள் நெருங்கிய அந்தக்கூட்டத்தில் ஒரு ஜீவன் மட்டும் சந்துஷ்டியின்றி ஸமாதானமின்றி அஷ்ட தரித்திரன் பெரும் புதையல் கண்டெடுத்து அதை யிழந்தாப்போல் மனங்கலங்கிக் கொண்டிருந்தான், "அரஹரா!" என்ற சப்தம் ஆயிரம் குரல்களிலிருந்து எழுந்து ஆகாசம் நிறைந்திருந்தாலும் அவன் காதில்மட்டும் அது நுழையவில்லை. அவன் நாவும் அசையவில்லை. ஏதோ காணாமற்போன பொருளைத் தேடுபவன்போல் அந்தக் கூட்டத்தில் எல்லார் முகத்தையும் பார்த்துத் தான் தேடியதையும் முகதரிசனம் காணாமல் அவதிப்பட்டுக் கொண்டிருந்தான், ஸ்வாமி தரிசனத்தில் அவனுக்குச் சிறிதும் நாட்டமில்லை. ஜனங்களுடைய ஆரவாரமும் உத்ஸவ உல்லாஸமும் அவனைப் பாதிக்கவில்லை. சந்தடி நெருக்கத்தில் முடிச்சவிழ்க்கப் பார்ப்பவன் மனம்போல் அவனுடைய மனநாட்டமெல்லாம் அவன் தேடும் முகத்திலே சென்றிருந்தது. அந்த முகம்தான் அவனுக்குத் தென்படவில்லை. அவளைத் தேடிக்கொண்டே பட்டணம் வடகோடியிலிருந்து தென்கோடி தாண்டித் திருவான்மியூருக்குச் சென்றான் சென்றும் அவளைக் காணக்கூடவில்லை. அவள் ஜாகையில்போய்ப் பலதடவைகள் விசாரித்தான்: அவள் தரிசனம் கிட்டவில்லை. கூட்டத்தில் புகுந்து எங்கும் அவளைத் தேடிப்பார்த்தான்: அவள் முகதரிசனம் கிடைக்கவில்லை. அவனுக்குத் தேடித்தேடிக் கால் அலுத்தது. விசாரித்து வாயலுத்தது. மனமும் அவளை நாடித் தேடி நடுக்குற்றது. அவன் மனோதைரியம் குலைந்தது. ஏது! அவளைக் காணுவோமென்று தோன்றவில்லையென்று தனக்குள்தானே சொல்லிக்கொண்டு குளத்தங்கரையின் படியில் 'உச்!' என்று ஒய்ந்து உட்கார்ந்தான். சந்திரனது தண்ணொளி அவனுக்கு நெருப்புத் திராவகம்போல் பட்டது. உடம்பெல்லாம் எரிச்சல்

காண இதென்ன சங்கடமாயிருக்கிற தென்று அவ்விடத்தை விட்டெழுந்து குளத்திலிறங்கி கை கால்களைச் சுத்தி செய்துகொண்டு முகத்தையும் பலதடவை ஜில்லென்றுள்ள ஜலம் விட்டுக் கழுவிக்கொண்டான்.

"பணமிருந்தால் என்னதான் ஆகாது?" என்கிறார்களே, "ஐயோ! என்னிடத்தில் எவ்வளவு பணமிருக்கிறது! லக்ஷம் கோடியாய்க் குவியல் குவித்தேனே! இதெல்லாம் யாருக்காகக் குவித்தேன்? என் கண்ணாட்டியைக் காணவேண்டுமென்றால் அவள் தென்படவில்லையே! இத்தனை பணமும் இருந்து எனக்கென்ன உதவிசெய்தது! பட்டணம் வடகோடியிலிருந்து தென்கோடி தாண்டிக்கொண்டு திருவான்மியூருக்கு வர உதவிற்று; வந்தும் பிரயோசனமென்ன! அவளைக் கண்டுபிடிக்க முடியவில்லையே! இந்தக் கூட்டத்தில் யாராவது என்னைச் சீந்துகிறார்களா! பாரேன்! எல்லாரும் உத்ஸாகமாகவிருக்க என் மனம் மட்டும் ஊஞ்சலாடுகிறதே! இந்த க்ஷணத்தில் அவள் இருக்குமிடத்தை யாராவது காட்டினால் உடனே கையில் ஆயிரம் ரூபாய்க்கு உண்டியல் கொடுப்பேனே! என்னையும் என் உண்டியலையும், என்பணக்குவியலையும் இங்கே யார் சீந்துகிறார்கள்? இந்த மனக்கவலையைத் தீர்க்க வழி தெரியவில்லையே!"—என்று சிந்தாக்கிராந்தனாய் தட்டுத்தள்ளாடின நடையுடன் குளத்தின்படிக் கட்டுப் படிகளை ஒன்றொன்றாக மிதித்து ஏறிக்கொண்டிருந்தான்.

தியாகராஜர் நடனத்தைப் பார்த்துவிட்டுத் திரும்பின ஜனங்கள் இவன் தள்ளாடிக் கொண்டு தளர்நடையோடு படிகளேறிவரும் கோலத்தைப் பார்த்துவிட்டு "இதோ போக ராஜா நடனம் செய்கிற அழகைப்பாருங்கள்" என்று சொல்லிக்கொண்டே இவனைச் சிறிதும் லக்ஷியம் செய்யாமல் வழிநடந்து போனார்கள்.

ஒருவன் "இதென்ன குடி மயக்கமோ? மதி மயக்கமோ?" என்றான்.

அவனுக்குப் பின்னேவந்த ஒரு பெண்மணி காதில் இந்த வார்த்தைகள் விழவும், அவள் "விதிமயக்கமல்லவோ எல்லாரையும் பிடித்து மயக்கி ஆட்டிவைக்கிறது! விதியைவெல்ல யாரால் ஆகும்? வியாஸர்கூட விதிக்குக் கட்டுப் பட்டுத்தான் இருந்தாரென்கிறார்களே!" என்று தன் தோழியோடு சொல்லிக் கொண்டு போனாள்.

"விதிக்குக் கட்டுப்பட்டு நடந்ததனால் தான் தியாகராஜர் அவருக்கென்று அருள்புரிந்து அவரது திருக்கூத்து தரிசனம் தருவராயினர். இல்லாவிட்டால் வியாஸரும் கூட வியாஸம் போல் (காக்கைபோல்) ஆயிரம் காலம் ஜீவித்திருக்கத்தான் முடியும். அருளுதயமும் இருள் நீக்கமும் திருக்கூத்து தரிசனமும் வித்திப்பதெப்படி? விதியை மதியால் வென்றால் தான் அருளும் தெருளும் வித்திக்கும், இல்லாவிட்டால் இருளும் மருளும் தான்"—என்று அவள் தோழி தேன்மாரி பொழிந்தாற்போல் திவ்யப்பிரசங்கம் செய்துகொண்டே போனாள்,

அவளுடைய இனிய குரல் காதில் படவும் அரவம் தீண்டினவன் போல் கோடீசுவரன் (அதுதான் அவன் பேர்) திடுக்கிட்டான்.

அவனுடைய ஞாபக சக்தி திடீரென்று திரும்பியது.

"அந்த இனியகுரல் நிர்மலா குரல் போல் தோன்றியதே! அக்குரலை யுடைய பெண்மணி யார்? அவள்தான் நான தேடுகிறவளா யிருப்பாளோ!" என்று ஒரு நினைவுண்டாயிற்று.

ஆனால் அந்த நினைவைப் பிடித்துக் கொண்டு பரியாலோசனை செய்யுமுன் சந்தேகம் வந்து அதைத் துரத்தி விட்டது.

குடி வெறியன் குளறுவதுபோல் திடச்சித்தமின்றி அவன் மனம் சங்கல்ப விகல்பங்களில் உழன்று தடுமாறியது.

* * *

கோடீசுவரன் மஹாபணக்காரன். பிரதமத்தில் பரம ஏழையாக விருந்தான். அவனுடைய அத்தை புருஷனாகிய ஆபத்சகாய மூர்த்தியின் சிபாரிசால் மதிராஸ் பாங்கியில் 20-ரூபாய் சம்பளத்தில் வேலைக் கமர்ந்திருந்தான். சொற்பசம்பளமானதால் தனிக்குடித்தனம் செய்யத் தாளாமல் அத்தை வீட்டோடுதானே அவனுடைய தங்கை விமலையும் வைதவ்யமடைந்த தாயாரும் வஸித்து வந்தார்கள். அவனுக்கு வயது 20. விமலைக்கு வயது 12. ஆபத்ஸகாய மூர்த்தியின் புத்திரியாகிய நிர்மலானந்தத்துக்கு வயது 13. உடனொத்த குட்டிகளிரண்டும் பள்ளிக்குச் சென்று பாட்டும் படிப்பும் கற்றுச் சந்தோஷமாய் அன்னப் பேடுகள் போல் வளர்ந்து வந்தார்கள்.

**கோடீசுவரன்** என்பது அவனுக்குக் காரணப்பெயராக வந்தமைந்தது. அவனைத் தொட்டிலிலிட்டபொழுது அவன் பாட்டியாரிட்ட நாமகரணம் கோபாலகிருஷ்ணன். அவன் பிறந்தபோது அவனுடைய தகப்பனாருக்கு அஷ்டைசுவரியமும் பொங்கிற்று. ஆனால் அவனுடைய தௌர்ப்பாக்கியம் அவனுடைய பாலப்பருவத்திலேயே தகப்பனாரை யிழக்கும்படி நேரிட்டது. அவர் திடீரென்று அனாயாஸ மரணமாய்ப் போனதால், அவருடைய சொத்துக்களெல்லாம் சரியாகப் பங்கிடு செய்யப்படாமல், வியாஜ்ய வியவஹாரங்களில் சிக்கிக் கடைசியில் ஒன்றும் தேறாமல் அழிந்து விட்டன. அவனுடைய பாட்டியார் பிள்ளைபோன வருத்தத்தில் மனக்கிலேச முற்று ஆறுதலடையாமல் தானே மறுலோகம் சென்றுவிட நேரிட்டது. அவளுடைய அந்தியகாலத்தில் குழந்தைகளிடத்தில் வைத்த வாஞ்சையால், தன் மாப்பிள்ளையாகிய ஆபத்ஸகாயமூர்த்தியையும் பெண்ணாகிய பங்கஜலக்ஷ்மியையும் கூப்பிட்டு 'நீங்கள்தான் இந்தக் குழந்தைகளைக் காப்பாற்ற வேண்டும். "காப்பாற்றுகிறோ" மென்று கைபோட்டுக் கொடுத்தால்தான் எனக்குப் பிராணம் போகும்; இல்லாவிட்டால் தொண்டாங்குழியில் துடித்துக்கொண்டே யிருக்கு' மென்றாள். பெண்ணும் மாப்பிள்ளையும் "அப்படியே" யென்று கைபோட்டுக் கொடுக்க, கிழவி சமாதான முற்றுப் பிராணனை விட்டாள். அது முதல் கோபாலகிருஷ்ணனும் விமலையும் அவர்கள் தாயாரும் ஆபத்ஸகாய மூர்த்தியின் ஆதரணையில்தானே யிருந்துவந்தார்கள். அவர் பிள்ளையைப் படிக்கவைக்க வேண்டு மென்று ஏராளமாய்ப் பணம் செலவு செய்து எல்லாப் பிரயத்தினங்களும் செய்து பார்த்தார். பிள்ளையாண்டான் படிப்பு பிரவேசப் பரீக்ஷைக்குமேல் ஏறவில்லை. வயதாய்விடவே, பையன் சோம்பேறிக் கூட்டத்திலாவது, தத்தாறிக் கூட்டத்திலாவது சேர்ந்து கெட்டுப் போகாதபடி மதிராஸ் பாங்கியில் சிபார்சு செய்து 20 ரூபாய் சம்பளத்தில் ஒரு வேலைசம்பாதித்துக் கொடுத்து, பையனை வீட்டோடேயே வைத்துக் கொண்டார்.

கோபாலகிருஷ்ணனுடைய அதிர்ஷ்டம் அவன் அத்தையாரைப் பரலோகம் கொண்டு போய்ச் சேர்த்துவிட்டது. ஆபத்ஸகாய மூர்த்திக்கு மனைவி போகவே பாரியாள் சோகத்தில் மனமிடிந்தவராகப் போய்விட்டார்.

நிர்மலானந்தத்துக்கு வயது 15-தானானாலும் விமலையினுடைய தோழமையினாலும், அம்மாமியினுடைய ஆதரவினாலும் குடித்தனம் கலையாமல் பார்த்துக் கொண்டு வந்தாள். ஆனாலும் ஆபத்ஸகாயமூர்த்தி மனம் தேறாமல்தானே தேஹாரோக்கியம் குன்றி தினேதினே க்ஷீணகதியடைந்து வந்தார்.

மனைவி சென்ற ஒரு வருஷத்துக் கெல்லாம் அவரும் அவள் நினைவாகவே யிருந்து பரலோகப்ராப்தி யெய்தினர்.

கோபாலகிருஷ்ணன் தாயர்பேர் **கோகிலாம்பாள்.** விமலை, நிர்மலை யிருவருக்கும் அவளை

விட்டால் வேறு கதியில்லை. அவளும் வைதவ்யமடைந்தவ ளாதலால், கோபாலகிருஷ்ணனை விட்டால் வேறுகதியன்றி யிருந்தாள்.

ஆபத்ஸகாயமூர்த்தி பெரியவியாபாரத்திலிருந்தபடியால் அவருள்ள வரையில் எல்லாம் வைபோகமாவே யிருந்தது. "செத்தால் தெரியும் செட்டியார் வாழ்வு" என்கிற பழமொழிப்படி அவர் இறந்தபிறகு அவருடைய ஆஸ்திபாஸ்திகளைக் கணக்கு வழக்குத் தீர்த்து ஆதாயம் பார்க்க, கையிருப்பு பூஜ்யமாக ஏற்பட்டது. கடனில் மூழ்காமல் தப்பிக் கொண்டதே பெரிய காரிய மென்று நிர்மலா ஆறுதலடைந்தவளாய் ஜீவனோபாயம் இருக்கவே யிருக்கிறது, பார்த்துக்கொள்வோம்!" என்று திடசித்தத்தோ டிருந்தாள்.

கோபாலகிருஷ்ணன் வீட்டிலே வசித்து வந்ததாலும் அம்மாஞ்சிமுறை யாதலாலும், ஆபத்ஸகாய மூர்த்திக்குத் தனது ஏகபுத்திரியை அவனுக்குக் கொடுத்துத் தனது மாமியாருக்குக் கொடுத்த வாக்குப் பொய்க்காமல் அவனை ஆளாக்கிவிடவேண்டு மென்கிற எண்ணமிருந்ததாலும், நிர்மலானந்தத்துக்கு கோபால கிருஷ்ணன் மேல் மனஞ்சென்றிருந்தது. அப்படியே கோபாலகிருஷ்ணனுக்கும் நிர்மலாவிடம் அகப்பற்றுண்டாயிருந்தது. ஆனாலும் 18-வயதாகுமுன் பெண்ணுக்கு விவாக ஸம்ஸ்காரம் செய்வதில்லை யென்கிற வாக்குறுதி கொடுத்திருந்ததால் அவர் விவாகப் பேச்சை யெடுக்காமலே விட்டிருந்தார்.

நிர்மலானந்தத்துக்கும் தகப்பனார் கொடுத்த வாக்குறுதிக்குக் குறைவுவரக்கூடாதென்கிற [illegible]தோடு, பால்ய விவாகத்தின் கெடுதி[illegible]யை யுணர்ந்தவளாதலால், தேகம் முதிருமுன் பிஞ்சிலேபழுத்த வெம்பலாய், பால்ய விவாஹத்திற் கட்டுப்பட்டு தேஹத்தைக் கெடுத்துக் கொள்ள இஷ்டமில்லை.

* * *

நிர்மலானந்தத்துக்கு வயசு 18 ஆய்விட்டது. எழும்பூர் ஸ்திரீ போதனாசாலையில் மாதம் ரூபாய் 20 வித்யாவேதனம் பெற்றுப் போதனா முறை கற்றுத் தேறினவளானாள்.

கோபாலகிருஷ்ணனுக்கும் விவாக காலம் கிட்டியதென்று, பாங்கிமானேஜர் ஆபத்ஸஹாய மூர்த்தியின் தோழராதலால், 25, 30 ரூபாய் சம்பளமுள்ள படிகளைத்தாண்டி 50 ரூபாய் சம்பளமுள்ள வேலையை அவனுக்குக் கொடுத்து அதில் கொஞ்சகாலத்துக்கு 'பதிலி, யாக 'ஆக்டிங்' வேலைபார்த்து வரும்படி நியமித்தார். அந்த வேலையில் அவனைக்காயம் செய்வது நிச்சயமே. ஆனாலும் துரையுடைய சம்மதி பெறுமட்டும் பதியலிாகவே வேலைபார்த்து வரவேண்டியிருந்தது.

நிர்மலா, இதுவரையில் அவளுக்கு நேர்ந்த கஷ்ட நஷ்டங்களிலெல்லாம் திடசித்தத்தை நழுவவிடாமல் எல்லாவற்றையும் பொறுப்பாய் ஏற்று அனுபவித்து வந்ததோடு வீண் கவலையென்பதின்றி நிர்விசாரமாயிருந்தாள். இப்பொழுது "கற்றதோர் கல்வியும் மனப்பழக்கம்" என்றபடி மனதையும் பழக்கிக்கொண்டு அவசியமாயின் பிறர் கையையாவது புருஷர் போஷணையையாவது எதிர்பாராமல் தானே ஜீவனோபாயம் தேடுவதற்கு வேண்டிய யோக்கியதையும் பெற்றிருந்தாள். இதுவரையில் அவள் தன் மனதை யெங்கும் போகவிடாமல் தன்னிஷ்டப்படி தானே அடங்கி நடக்கும்படி ஆண்டு பழக்கி வந்தாள். இப்பொழுது ஒரு கவலை யேற்பட்டது.

"கலியாணம் செயதுகொண்டு 'குடித்தனமோ துரைத்தனமோ' வென்று குடித்தனப் பொறுப்பில் அமர்கிறதா, அல்லது கன்னியா ரத்னமாகவேயிருந்து பாலபோதனையில் பிறர் குழந்தைகளைப் பள்ளிப்பழக்கம் படிய வளர்த்து வருகிறதா?" என்கிற கேள்வி அவளைப் பிடித்துக் கொண்டு மிகவும் வாதித்தது.

18 வயதாய்விட்டபடியால் விவாகத்துக்குத் தடையில்லை. தனது உள்ளத்தைக் கொள்ளை கொண்ட அம்மாஞ்சி கோபாலகிருஷ்ணன் இன்னமும் உள்ளூரிலேதா னிருக்கிறான். அவன்மட்டும் அவளை முன்போல் நேசித்து தன்னை விவாகம் செய்துகொள்ளக் கேட்டுக் கொண்டால், அவளுக்கு அதுவே பரமசம்மதம்! ஆனால் அவனிடம் வலுவில் தூதனுப்பிக் கேட்க இஷ்டமில்லை. அவன் வரும்போதெல்லாம் இந்தக் கேள்வி யெப்பொழுது அவனுடைய வாயிலிருந்து பிறக்கப்போகிறது என்று காத்துக் கொண்டிருந்தாள். அவன் அத்தங்கார் உறவு கொண்டு ஸரஸ ஸல்லாபமாகப் பேசிய போதிலும், "என் அத்தங்காரை முத்தந்தாவென்று நான் எப்போ கேட்பது" என்று ஜாடையாக ஒரு வார்த்தை சொல்லி யிருந்தாலும் போதும்! அவன் மட்டும் அதற்கு இடங்கொடுக்காமற்றானே ஸரஸஸல்லாபம் செய்து வந்தான்.

நிர்மலானந்தத்துக்கு மனம் கவலை கொண்டது. இவனிடத்தில் ஏதோ ஆள்மாறாட்ட மிருக்கிறாப்போலிருக்கிறதென்று சந்தேகித்தாள்.

தன் தகப்பனாரிருந்தபொழுது விளையாட்டாய் என் அத்தங்காரை அகமுடையாள்என்று பாத்தியம் கொண்டாடுவது எப்போ என்று பலதடவைகள்சொல்லிவந்தாலும்,இப்பொழுது அவர்களிருவரும் மனமொத்து விவாகம் செய்துகொள்ளத் தடையொன்று மில்லாதபோது, அந்தப்பேச்சுக்கே இடம் கொடுக்காமல் அவன் ஸரஸப்பேச்சுகள் பேசுவது அவளுக்கு ஹிதமாகவில்லை. இவன் நம்மை என்ன வெள்ளாட்டி பெற்று வேலையாலெறிந்து விட்டவள் போலல்லவா நினைக்கிறதாகத் தோன்றுகிறது என்று சமுசயிக்கலானாள்.

சமுசயமும் சந்தேகமும் வாசல்வழியாக உள்ளே புகுந்தால் அன்பும் ஆதரவும் கொல்லவழியாகப் பறந்தோடி விடுமென்பதுநிஜமே. இப்படி சந்தேகாஸ்பதங்கள் உதிக்கவே இருவருக்கு முண்டாயிருந்த மனராசிக்குக்குறைவு வந்தது. மனராசிகுறையவே அபேதம்நீங்கி பேதபாவனைகள் உதிக்கலாயின. பேதபுத்தி பாதக மெல்லாம் விளைக்குமல்லவா! இருவருக்கு முள்ள மனப்பொருத்தம் பேதபுத்தியால் கலைபடவே, மனவேற்றுமை தானேயுண்டாயிற்று. ஒருவரை யொருவர் உண்மையாக அறியும் இரகஸியத் திறவுகோலாகிய அபேதபாவனையை இழக்கவே, இருவரும் ஒருவரையொருவர் தப்பர்த்தம் செய்துகொள்ளத் தலைப்பட்டார்கள்.

நிர்மலாவுக் குண்டாயிருந்த மனவருத்தத்தில் தன்னுடைய குறையை விமலாவினிடம்கூடச் சொல்லிக் கொள்ளவில்லை.

கோபாலகிருஷ்ணனிடத்தில் தான் உண்மையான அன்புவைத்தும், அவன் தனது ஆஸ்திபாஸ்தியில் கண்ணாயிருந்தானேயன்றி தன்னிடத்தில் உண்மையான அன்பு வைக்கவில்லையென்று நிர்மலா கொஞ்சம் கொஞ்சமாகத் தீர்மானிக்கலானாள். இந்தத்தீர்மானம் ஸ்திரப்படவும் அவள் மனமுடைந்து தீராத சோகத்தில் மூழ்கினவளானாள். "புருஷர்களையே நம்பக் கூடாது!" என்று நினைக்கலானாள். "சேலைகட்டிய மாதரை நம்பினால்" என்று எழுதிய கவியை நான் கண்ணால்மட்டும் காண்பேனானால் கன்னத்தி லோரறைகொடுத்து அதை மாற்றி "மீசை முளைத்த மனிதரை நம்பினால்" என்று மாற்றி யெழுதச் சொல்வேன் என்று சபதம் செய்து கொண்டாள்.

அவளுக்குண்டான சோகத்தில் புருஷரெல்லாரும் இப்படித்தான் நம்பத்தகாதவர்களாயிருப்பார்களென்று நினைக்கலானாள்.

நினைக்கவே, தனக்குக் கலியாணமே வேண்டாமென்று வெறுக்கலானாள்.

"காரைக்காலம்மையாரைப் போல் பகவானைக்காணும் பாக்கியம் பெற்றிருந்தால் இந்த அழகு, பாலியமெல்லாவற்றையும் அவருக்கு அர்ப்

பணம் செய்துவிட்டு பூததேஹ மெடுத்துத் திரிவேன்" என்று சொல்லிக் கொண்டாள்.

"பாழும் படிப்பு பக்திவழியில் செலுத்தி முக்தி வழியைக்காட்டாமல் வயிறு வளர்க்கும் சோற்றுப்படிப்பாகவல்லவோ முடிந்தது. இனி வேலையிற் புகுந்து நாய்போல் வயிறு வளர்க்க வேண்டியதுதான். இனிஅன்பும் இன்பும் எனக்கில்லை."—என்றுசொல்லி சோகத்தில் மூழ்கி ஒருவாறு தன்னைத்தானே தேற்றிக்கொண்டாள். விதியை நொந்தாள். மதியை வேண்டி வரம் புரிவேன் என்றாள்.

—:(*):—

## LONGFELLOW'S 'PSALM OF LIFE.'

[வாழ்வென்பது சொப்பனம் போலும் பயனற்றதென்று சிலர் கூறுவதை மறுத்து அஃது முக்காலும் மெய்யான தென்று 'லாங்பெலோ' என்னும் ஆங்கிலகவி கூறுகின்றனர். அதைத் தமிழ் மொழியில் விவேகசிந்தாமணிக்கென் றெழுதியதை இத்தருணம் கீழேயெடுத்துப் பிரசுரிக்கிறோம்]

### வாழ்வருட்பா.

—:o:—

கலிவிருத்தம்.

1

வாழ்வெனப் படுவதோர் வெறுங்கன வதில்
[1] வீழ்பயன் சிறிதெனும் விளம்பா னின்றேன்
மாழ்கிய விசையனில் வழுத்தலீ ரது
தாழ்வுறு முரையலாற் [2] சரதமாகுமோ ?

2

வேண்டுநன் முயற்சியை விடுத்து வாழ்வெலாம்
பூண்டகு பயனற வறிதிற் போக்குவான்
ஈண்டொரு நடைப்பிண மென்னற் பாலனும்
காண்டரு தோற்றமெய்க் காட்சியாகுமோ ?

1. வீழ்=விரும்பத்தக்க. 2. சரதம்=உண்மை.

3

பொய்யல வாழ்வுமெய்ப் பொருள தாகுமால்
வெய்தென வுடலொடும் [3] வீவ தன்றுகாண்
நொய்யமண் ணீயதி [4] ஞொடிவை யென்றது
[5] மெய்யிருக் கேற்பலா துயிரை மேவுமோ ?

4

உண்ணலன் றுவத்தலன் றுறுதி யாகுவ
தெண்ணியுள் ளிரங்கலு மன்று நாளுநாம்
கண்ணுமுற் பகலினுங் கருந்தி னெங்கிடப்
பண்ணுறு செயலதே பயன்கொள் வாழ்க்கையாம்

5

கல்வியோ வரையில கணித்த நாள்சில
வெல்வலி [6] விறலுடைத் தெனினு நெஞ்சுதான்
சொல்பிணப் பறையென வடிக்குந் தோறுமே
வல்லையிற் சுடலையின் மருங்கு சேர்க்குமே.

6

புவிபெறு மான்றதோர் பொர்க்க ளத்திடை
நவில்தரு வாழ்விவனும் [7] ஞாட்பின் காவலில்
[8] இவவுறு மறிவிலா னினத்தைப் போன்றிடா
துவமையில் வீரனென் றோங்கு வீர்களே.

7

இனியதொன் றாயினு மெதிர்வு நோக்கலீர்
மனமதி லிறந்தன நினைந்து மாழ்கலீர்
தனதெனு நிகழ்விடைத் தளர் வின்றாக்கியே
[9] முன்னவ னருள்கொடு முயலு வீரரோ.

8

பெரியவர் சரிதைகள் பிறங்கும் யாவையும்
அறியன வவர்களி னூற்றி யாருயிர்
பிரியினம் பிறகடிச் சுவடு காலமாம்
உருமணல் நிருத்தலா மெனவங் கோதுமால்.

3. வீவறு=கெடுவது. 4. நொடிவை=அழிவாய். 5. மெய்=உடல்.

6. விறல்=வீரம்; வல்லை=சீக்கிரம்.

7 ஞாட்பின்காவல்=படைகள், பகைவர்தம்மைச் சடுதியில்வந்து தாக்காது இராமுழுதும் காத்துநிற்கும் காவல். 8. இவவு=இழிவு; ஆனினம்=பசுக்கூட்டம்.

9. முன்னவன்=கடவுள்.

9

நிலவிய வாழ்வெனு நெடுங்க டன்மிசைக்
[10] கலமுடைந் தயர்ந்துநீள் கரையைமேவியாங்
கலைபவ னேக்கியுள் ளயர்வு நீங்குமா
றிலகுமவ் வடிச்சுவ டியைத லாகுமே.

10

ஆதலா லிடரெனைத் தணைவ தாயினும்
மேதகு மனவலி விடுத்த லின்றியே
ஏதமற் றியாவரு மியற்றற் பாலன [வே.
[11] கேதமுஞ் சோம்பலுங் கொடுத்துச் செய்க

11

பெறுந்தோறும் போதுந்தாம் பெற்றதென் றிரா
தறந்தருஞ் செயன்முன் னூக்கி நாளுமே
திறந்தர வுழைக்கவுஞ் சேரும் வண்பயன்
உறுந்துணை பொலறையினே டுறவுந்தேர்கவே.

---

## Leela Sundari : Her Fortune.

### Chapter II.

### லீலா சுந்தரியின் பாக்கியம்.

——:-:——

அத்தியாயம் 2.

உன் தாயார் சண்பகவல்லி காலாப்பட்டி ஜமீன்தார் ஞானசந்திரரின் புத்திரி. உன் தாயார் தகப்பனுர் இஷ்டத்துக்கு விரோதமாக சுரேந்திரநாதை மணம் புரிந்தாள். தன் கலியாணத்தைப்பற்றி உமக்கு எப்பொழுதாவது சொல்லியிருக்கிருளோ என்று விசாரித்தார் வந்த பெரியவர்:

எனக்குத் தெரிந்தவரைக்கும் இல்லை என்று தலையை ஆட்டினுள் லீலா.

ஆச்சரியம்தான். சந்திரசூடர் என்பவரைப் பற்றி சொல்லி யிருக்கின்றனளோ. சொல்லி யிருக்கிருள். சந்திரசூடர் என் தாயின் சகோதரர்.

ஆமாம் அவர் மிகவும் பணக்காரர். அவரை எனக்கு நன்ருய் தெரியும். நானும் அவரும் ஒன்ருய் வாசித்தோம்.

சந்திரசூடருக்கு நரேந்திரர் என்று ஒரு தமயனுண்டு. அவர் தனது மனைவியுடன் தேசாந்திரம் போனுர். அவர் அங்கேயே இறந்துவிட்டார். காலாப்பட்டிக்கருகுள்ள வசந்த மாளிகையைப் பற்றி கேள்விப்பட்டிருக்கிறீர்களோ.

இல்லை.

ஹா! வசந்த மாளிகையில்தான் உமது தாயார் பிறந்தது. அது மிகவும் மனோரம்மியமான இடம். தகப்பனுரைப்போல் சகோதரராகிய சந்திர சூடருக்கும் உன் தாயின் மணத்திற்கு விரோதமாயிருந்தார். அது உனக்குத் தெரிந்திருக்கலாம். ஆம் சொல்லி யிருக்கின்ருள்.

சரி. தமையன் தேசாந்திரம் போய் இறந்துவிட்டார். தகப்பனுர் முன்னுலேயே இறந்துவிட்டார். சகோதரியோ தன் இஷ்டத்திற்கு விரோதமாக மணம் புரிந்துகொண்டு பிரிந்துவிட்டாள். அவருக்குப் பிள்ளை யில்லை. அதனுல் தனதாயுள் முழுதும் வசந்த மாளிகையில் தனியாய் வசிக்கிறார்.—இப்பொழுது நீர் பாட்டுச்சொல்லிக் கொடுத்து அதனுல் ஜீவிக்கிறீர். இப்பொழுது கொஞ்சம் பாடுவீர்களோ.

ஆகட்டும் என்று சொல்லிக்கொண்டு ஆச்சரியப்பட்டவளாய் லீலா வாத்தியத்தை எடுத்துக்கொண்டு பாட ஆரம்பித்தாள். அவள் பாடுகையில் வந்தவர் மேஜையிலிருந்த புஸ்தகங்களை ஒவ்வொன்ருய்ப் புறட்டிப் பார்த்தார். அவைகளில் ஒரு பெரிய ராமாயண புஸ்தகத்தின் உள்பக்கத்தில் சுரேந்திர நாதுக்கும் சண்பகவல்லிக்கும் நடந்த விவாகத்தையும் அவர்களுக்கு லீலாசுந்தரி பிறந்ததையும் பற்றி எழுதி யிருந்தது. அதைப் பார்த்து வந்தவர்

---

10. கலம்=கப்பல்.
11. கேதம்=துக்கம்.

திருப்தியடைந்தவராகி லீலாவைப் பார்த்து "ஆகா ரொம்ப நன்றாய் வாசிக்கிறாயே, போறும்! உன் தாயின் சகோதரர் சந்திரசூடர் இறந்து போய் விட்டாரென்பதை சொன்னேனே! அதை சொல்லுவதற்காகத்தான் வந்தேன்: மறந்து போய்விட்டாப்போலிருக்கிறது. அவர் இறந்துபோன பொழுது ஒரு உயில் எழுதினார். அவருக்கு காலாபட்டியிலுள்ள ஜமீன் அதன் மாளிகையை தவிர இன்னும் மற்ற மாளிகைகளும் சொந்தமுண்டு. நான்தான் அவர் வக்கீல். இந்தா என்று தன் பெயரடங்கிய சீட்டு ஒன்றைக் கொடுத்தார். அதில் சத்தியநாயகம் பிள்ளை, வக்கீல், அரண்மனைத்தெரு என்று போட்டிருந்தது. நான்தான் உயிலை எழுதினேன். சந்திரசூடரின் ஆஸ்தி அவன் சகோதரி சண்பகவல்லிக்குப் போகவேண்டுமென்றும், அவள் இறந்துபோயிருந்தால் அவள் குமாரி லீலாசுந்தரிக்குப் போகவேண்டுமென்றும் எழுதப்பட்டது. அதனால் நீ காலாப்பட்டி ஜமீனுக்கும் அதைச் சுற்றியுள்ளவைகளுக்கும் அதிபதி. யானாய்."

"அப்பொழுது நான் லக்ஷாதிபதி இல்லையா. பார்க்கப்போனால் கோடீசுவரி, அப்படியா!" என்று சொல்லிக்கொண்டே கீழே மூர்ச்சையாய் விழுந்துவிட்டாள் லீலா.

"ஓ ஓ அம்மா, அவள் பேரென்ன அம்மா, வாருங்க அம்மா, லீலா மூர்ச்சையாய்ட்டாள் அம்மா" என்றுகத்தினார். சத்தியநாயகம்பிள்ளை உடனே நாகம்மாள் லீலாவை மூர்ச்சை தெளிவிக்கச் செய்யலானாள். அதற்குள் சத்தியநாகம் பிள்ளைபோய் கொஞ்சம் பானகம் வாங்கிவந்தார். லீலா கண் விழித்து அதை சாப்பிட்டு களை தீர்ந்தாள்.

"ஐயா, நீர் நான் கோடீசுவரி என்கிறீர்?"

"சந்தேகமில்லாமல்."

"ஆனால் இப்பொழுது கொஞ்சம்பணம் கொடுங்கள்."

இதோ என்று ரூபாய்களும் நோட்டுகளுமாக ஆயிரம் ரூபாயை யெடுத்து மேஜையில் வைத்தார்.

நாகம்மாள் பயந்துவிட்டாள். அவள் ஆயுள் முழுவதும் இவ்வளவுரூபாயைப் பார்த்ததில்லை. அங்கு கூடியிருந்த அவள் குழந்தைகள் ரூபாயைக் கண்ட சந்தோஷத்தினால் கைகொட்டிக் குதித்தன.

ஆனால் லீலாவோ "நான் கோடீசுவரி ஹ்ம்! கோடீஸ்வரி, அப்பா! ஜமீன்தாரிணி, ஹ்ம்! காலையில் பிச்சைக்காரி, மாலையில் பணக்காரி, அதுவும் ஒரு கோடீஸ்வரி" என்றுமுணுமுணுத்துக் கொண்டிருந்தாள்.

---

## The Viceroy's Visit.

### An appeal on behalf of the Children.

We call the attention of our readers and the general public to the leader in this September issue of the *Vivekachintamani* and to the circular letter "calling attention to the mutual sympathy and attraction of love naturally existing between the child-heart of the greatman now filling the august position of the Viceroy and the pure hearts of the student population," and publicly appealing for co-operation and help to consummate the intuitive aspiration of the young hearts to respond to the love and affection of the great heart that "goes out to meet them." We hereby respectfully appeal to them one and all as also to our teachers and guides of children in schools and colleges and other educational organisations to lend us a helping hand in making the children's movement a success. It is proposed to print and distribute the Children's Address of Welcome to the Viceroy with the Children's Tribute of Love from the Children's Day record to all the students and school children, so far as funds at our disposal would permit. We have already distributed 3000 copies of these unaided, but we require 20,000 copies more. A subscription list has been opened for this purpose and voluntary subscriptions in aid of the movement will be gratefully received and utilised by the Hony Secy. to the Social Service Branch of the Ananda Mission, Lalitalaya, Madras, S. Copies of addresses when printed will be distributed by the Lalita Publishing Co., Lalitalaya, Mylapore, Madras, S.

## Historical Notes.
## சரித்திரசம்பந்தமான குறிப்புகள்.

———(:o:)———

### Mahabalipuram.
### மஹாபலிபுரம்.

மஹாபலிபுரம் என்னும் ஊரானது சென்னைக்குத் தெற்கே 32-மைமயில் தூரத்தில் செங்கற்பட்டு ஜில்லாவில் கோவளம், சதுரங்கப்பட்டணம் இவைகளுக்கு மத்தியில் கடற்கரையிலிருக்கிறது. நமது தென்னிந்தியாவில் நாணயத்திற்கும் ஆச்சரியத்திற்கும் பெயர் பெற்ற சிற்பவேலைகள் எவ்விடமிருக்கின்றன வென்றால் மஹாபலிபுரத்தில்தான். இந்தக் காரணத்திற்காகவே அநேக வெள்ளைக்காரர்கள் ஒவ்வொரு விடுமுறை தோறும் மகாபலிபுரம் போய்ப் பார்த்து வருவதுவழக்கம். அன்றியும் மகாபலிபுரத்தைப் பற்றியும் அவ்விடத்திய சிற்பத்தைப் பற்றியும் அநேக புஸ்தகங்களில் எழுதப்பட்டிருக்கின்றன. சிலர்தான் மகாபலிபுரத்தைப் பார்த்திருப்பார்கள்.

முதல் முதலில் மகாபலிபுரம் என்ற பெயரைப்பற்றி சற்று விசாரிப்போம். இந்த ஊரில் மகாபலி சக்கிரவர்த்தி யாண்டதாகவும் அதன் நிமித்தம் இந்த ஊருக்கு 'மகாபலிபுரம்' என்று பெயர் வந்ததாகவும் சிலர் சொல்லுவார்கள். மகாபலி சக்கிரவர்த்தி கதை எல்லாருக்கும் தெரிந்தவிஷயமாகையாலதை நாமிங்கு எடுத்துக் கூறுவது அனாவசியம். ஆனால் இந்த ஊரிலிருக்கும் சாஸனங்களில் ஒன்றாவது மகாபலிசக்கிரவர்த்தியைப் பற்றிச் சொல்லாததினால் மகாபலிபுர மென்று இந்த ஊருக்கு வந்த பெயரானது காரண மின்றி ஜனங்களால் சப்தானுஸாரியாய் கொடுக்கப் பட்டதாக ஊகிக்கவேண்டியிருக்கிறது. 'மகாபலிபுரம் என்பது எந்த சப்தத்தை அனுசரித்து வந்தது? ஆனால் இந்த ஊரின் சரியான பெயர் என்ன?' என்று கேள்விகள் பிறக்கலாம். சாஸனங்களாலும் சரித்திரத்தாலுமிந்த ஊரின் பெயர் 'மாமல்லபுரம்' என்று விற்படுகிறது. மல்லான் என்பது பல்லவ வம்சத்து அரசர்களின் பட்டப் பெயர். இவர்கள் சோள அரசர்களுக்கு முந்தி தொண்டமண்டலத்தி லாண்டு வந்தவர்கள். 'மா' என்றால் 'பெருமை பொருந்திய' என்பது எல்லாருக்கும் தெரிந்த அருத்தம். பெருமை தங்கிய மல்லவர்களுடைய பட்டணம் என்பது இதன் பொருளாகும். இந்தச் சிறு ஊர் பழையகாலத்தி லிருந்தபடியாலிதற்கு 'மாமல்லபுரம்' என்று பேருண்டாயிற்று. மாமல்லபுரம் என்ற சப்தங்களுக்கு பிற்காலத்தில் அதிலடங்கிய சரித்திரம் தெரியாமற்போகவே அங்கிருந்த ஜனங்களுக்கு அருத்தம் விளங்கவில்லை. அந்த சப்தங்களை ஒருவாறு மாற்றி மகாபலிபுரம் என்று வைத்து விட்டார்கள். இந்த 2-பெயர்களுடனும் இன்னமொரு பெயர் இந்த ஊருக்கு உண்டு. அதாவது 'Seven Pagodas'— ஏழு கோவிற்கள். இந்தப் பெயர் பார்க்கும் பொழுதே இங்கிலீஷ் காரர்களிட மிருந்து உண்டானதாகத் தெரிகிறது. 100,—150- வருஷங்களுக்கு முன் இந்த ஊருக்குச் சமீபத்தில் கப்பல்கள் போகும்போது மாலுமிகள் கரையோரம் 7-கோவில்கள் தங்களுக்கு தோற்றினபடியால் இந்த இடத்திற்குத் "Seven Pagodas" "ஏழு கோவிற்கள்" என்று பெயரிட்டார்கள். இதை ஒரு நிச்சயமாய் வைத்துக்கொண்டு முதல் முதலில் இவ்விடத்தில் 7-கோவிற்க ளிருந்ததாகவும் அவைகளில் 6-சமுத்திரத்தில் முழுகிப் போயின என்றும் இப்போது ஒன்றுதான் கரையோரம் இருக்கின்றதென்றும் ஜனங்கள் சொல்லுகிறார்கள். இது சுத்தப் பிசகு. ஏனெனில் இப்போது மாலுமிகள் மாமல்லபுரம் சமுத்திரத்தின் வழியாகப் போகும்போது கரையோர மிருக்கிற இந்த ஒரு கோவிலைக்கூடக் கண்டு பிடிப்பது முடியாதகாரியம். ஏனெனில் அது வெகு தாழ்ந்திருக்கிறது. ஆனால் உயர்ந்த குன்றுகளையும் அக்

குன்றின் சிகரங்களையும் தூர இருந்து பார்க்கலாம். அவைகள் 7-உருவங்களாகக் காணப்படுகிறபடியால் இந்த ஊருக்கு Seven Pagodas என்று அவர்கள் பெயரிட்டு விட்டார்கள். குன்றின் சிகரத்தில் எப்போதும் ஹிந்துக்கள் கோவில்கட்டி யிருக்கிறார்கள் என்பது அவர்களின பிப்பிராயம். அப்படி அவர்களிட்ட பெயர் நாளதுவரையில் வழங்கியும் வருகிறது. அகையாவிந்த ஊருக்கு மூன்று முக்கியப் பெயர்கள் உண்டு—மகாபலிபுரம், மாமல்லபுரம், ஏழு கோவிற்கள். இவற்றுள் மாமல்லபுரம் என்பதுதான் சரியான பெயர்.

இந்தப் பெயருக்குத் தகுந்தபடி இது முற்காலத்தில் ஒருபெரிய பல்லவ பட்டணமாயிருந்தது. தற்காலத்தில் பல்லவர்களுடைய விசித்திரமான சிற்பசாஸ்திர வேலைகளைப் பார்க்கவேண்டுமென்றால் மாமல்லபுரம் போனால்தான் தெரியும். இந்தப் பட்டணமானது (இப்பொழுதுசிறு கிராமம்,) சமுத்திரக்கரையி விருக்கிறது. பட்டண மிருந்து 'பாப்பாஞ் சாவடி' யிற் போய் படகேறினால் ஒரு ராத்திரியில் போகலாம். அல்லது சாயந்திரம் தென்னிந்தியா ரெயிலேறி செங்கற்பட்டிலிறங்கி திருக்கழுக்குன்றம் மார்க்கமாய் ஒரு ராத்திரியில் மாமல்லபுரம் போய்ச் சேரலாம். தூரத்திலிருந்து பார்க்கும்போது குப்பல் குப்பலாய் சில கற்கள் கண்ணுக்குத் தென்படும். இந்த இடத்திலும் ஆச்சரியமிருக்கிறதா என்று ஜனங்கள் சந்தேகிக்கக்கூடும். குன்றுகளைக் கடந்து ஊருக்குள் வந்து அவைகளின் முன் நின்றுவிட்டால் நேத்திரங்களுக்கு உண்டாகு மானந்தத்திற்கு அளவேயில்லை. அநேக விசித்திர வேலைகள் நாலுபக்கங்களிலும் கண்ணைக் கவரும்போது 'இது என்ன அற்புதக் காக்ஷி' கதைகளில் வர்ணிக்கப்பட் டிருக்கிற இந்திரலோகக்காக்ஷியா, இது என்ன? வென்று சந்தேகிக்கும்படி தோன்றும். இவ்விடத்திய சிற்ப வேலைகளின் அற்புத மென்னவென்றால் அநேகமாய் எல்லாம் ஒரே கல்லில் குடைந்தெடுத்த வேலை. இவ்வேலையை அங்கிலேய சிற்ப சாஸ்திரிகள் "Monolithic caves"—ஒரு கல்லில் செதுக்கப்பட்ட குகைகள் என்பார்கள். இது தான் இங்கு வெகுவிசேஷம். மாமல்லபுரத்தைத் தவிறவேறு ஒரு இடத்திலும் தென்னிந்தியாவில் ஒரேகல்லில் செதுக்கப்பட்ட குகைகளும் கட்டிடங்களும் கிடையவே கிடையா. பம்பாய்க்கு சமீபத்தில் 'எலிபாண்டா' (Elephanta) என்னும் குகைகளும், தக்காணதேசத்தில் 'எல்லோரா' (Ellora) என்னும் இடங்களும் மாமல்லபுரத்தைப்போல ஒரு கல்லில் செதுக்கப்பட்ட குகைகளை யுடையவைகள். ஆகையால்தான் இந்த ஊருக்கு இவ்வளவு மகிமை வந்தது. ஒவ்வொரு வேலையும் சிற்ப சாஸ்திரத்தை அனுசரித்து ஒருவித பழுதுமில்லாமல் கடைசல் பிடித்தாற்போல் தோன்றும்.

முதல் முதலில் மாமல்லபுரத்தில் நமது கண்ணுக்குத் தென்படுவது 90-அடி நீளமும் 30-அடி உயரமுமான ஒரு பெரும்பாறை. இதற்குப் பெயர் 'அர்ச்சுனன் தபசு' என்று சொல்வார்கள். நாம் இதை முதலில் வரைவோம். இது அதிவிசித்திரமான வேலை. இது ஒரு பாறை என்று முன்னமே சொன்னோமே; இதில் 150–200 உருவங்கள், மனுஷன், மிருகம், பக்ஷி, இவை இந்த லோகத்தில் எத்தனை வகைகளுண்டோ அத்தனையும் தன் தன் வடிவத்தில் மேலெடுத்துக் காட்டி கொத்தப்பட் டிருக்கின்றன. ஒவ்வொன்றும் அழகின் அவதாரமாகத் தென்படுமே யல்லாது அற்பஸ்வற்பமாகக் காணாது. நல்லது, இத்தனை உருவங்களை மேலெடுத்துக் காட்டிக் கொத்திய சிற்பசாஸ்திரிகள் எவ்வளவு கைதேர்ந்த வேலைக்காரர்களாக இருக்கவேணும். ஒரேகல்லில் 150,—200 பிம்பங்கள் வேலை செய்யப்பட்டிழிக்கின்றன. ஒரு பிம்பம் ஊனப்பட்டால் எல்லாம் போயிற்றே; அப்படி வராது என்கிற தைரிய

மிவர்களுக்கு இருக்க எத்தனை ஷகைப்பழக்கமும் தேர்ச்சியு மிவர்களடைந்திருக்க வேணும். ஒவ்வொன்றையும் பார்த்தால் உயிர் ஒன்றொழிய அதேபாவனையா யிருக்குமே யல்லாது வேறு வித்தியாசம் கொஞ்சங்கூட இராது. இந்த வேலைக்கு 'அர்ச்சுனன் தபஸ்' என்ற பெயர் வந்ததற்குக் காரணம் என்ன வென்றால் இந்த சித்திரத்தின் சற்றேறக்குறைய நடுமையத்தில் ஒருவன் ஆனந்தத்தால் கூத்தாட நாம் காண்போம். அவன்தான் அர்ச்சுனன். சிவபெருமானிடம் பாசுபதாஸ்திரம் வாங்க இவன் காட்டிற்கு வந்தான்; இவன் தவத்தில் உட்காரும்போது அந்தக் காட்டிலிருந்த எலி புலி, காக்கை, கௌதாரி, யானை, கரடி, பூனை, பாம்பு முதலான எல்லா ஜந்துக்களும் இவனுடன் தவத்திற்கு வந்துட்கார்ந்தனவாம். அங்கிருக்கும் பிம்பங்களின் அருத்தம் இதுவே: இவன் தவம் பலித்து, ஈசுவரன் கையில் சூலாயுதம் ஏந்தினவரா யிவன் கண்ணிற்குப் பிரசன்னராகவே, இவன் ஆனந்தக் களிப்பால் தாண்டவமாடினான். அருச்சுனனுக்குப் பக்கத்தில் சூலபாணியாகிய ஈசுவரனை இந்த சித்திரவேலையில் நாம் காணலாம். இந்தத் தபசியாகிய அர்ச்சுனன் அநேக நாளாய் பட்டினி கிடந்து தோலொட்டி எலும்பு தோன்றி யிருப்பதையும் அப்படியே நாம் காணலாம். அதல்லவோ சிற்பம். இந்த அற்புத சிற்பத்தைப் பாராக் கண்கள் வீண் கண்கள்.

இதற்குச் சமீபத்தில் கிருஷ்ணமண்டபம் என்றொரு மண்டப மிருக்கிறது. இதுவும் ஒரே கல்லில் கொத்தியிருக்கப்பட்டவேலை. இதில் 100-பதுமைகள் மாடும் மனிதனுமாகக் கொத்தப்பட்டிருக்கின்றன. வெகு விசித்திர வேலை. கிருஷ்ணபிரானுடைய கோகுலவாசம் இதில் பொளியப்பட்டிருக்கிறது. புல்லாங்குழலூதிக்கொண்டு கண்ணன் நிற்க அவனைச் சுற்றி 50-மாடுகள் மதத்துடன் நிற்பதையும், சிலர் மாடு கரப்பதையும், இடைச்சிகள் தயிர்க் கூடையைத் தலையிற் சுமந்துபோவதையும், குழந்தைகள் இடுப்பிலும் தோளிலும் தொத்திக்கொண்டிருப்பதையும், சில கிழங்கள் தடியை ஊன்றி நடப்பதையும் சில சிறு பெண்கள் உல்லாசமாய் சிரித்துக்கொண்டுபோவதையும் பிள்ளைகள் விளையாடுவதையும் கன்றுக்குட்டிகள் துள்ளுவதையும், தாய்மடியில் ஊட்டுவதையும் இந்தக் கிருஷ்ண மண்டபத்தில் காணலாம். இவ்வளவு வேலையும் ஒரே கல்லில்.

அங்கிருந்து கொஞ்சதூரம் மலை ஏறிச் சென்றால், 'சேஷசாயிக் குகை' என்ற ஒரு குகைக்கு நாம் வருவோம். இதுவும் ஒரே கல்லில் செய்யப்பட்டிருக்கும் வேலை. இதில் பிரதானமாய் நடுவில் ஒரு சிவன் கோயிலிருக்கிறது. பார்வதியுடன் பரமசிவன் ஒரு ரிஷபத்தின் மேல் தன் காலைத் தொங்கவிட்டுக்கொண்டு உட்கார்ந்திருக்க நாம் காண்போம். இடது பக்கத்தில் ஆதிசெஷன்மேல் பெருமாள் பள்ளிக்கொண்டிருக்கிறார். இந்தக் குகையின் வலது பக்கத்தில் மகிஷாசுரவதம் காட்டப்பட்டிருக்கிறது. இந்த சித்திரவேலைதான் வெகு எடுப்பால் எடுத்துக் காட்டப்பட்டிருக்கிறது. பார்வதியம்மை தனது வாகனமாகிய சிங்கத்தின் முதுகிலேறிக்கொண்டு தனது பரிவாரங்களுடன் மகிஷாசுரனை எதிர்ப்பதையும் அவனும் தனது பரிவாரங்களுடன் கதையால் அம்மனை அடிக்க வருவதையும் ஒரு யுத்த களத்தில் இரண்டு சத்துருக்கள் எதிர்த்து நிற்பதை எவ்வளவு பயத்துடன் நாம் பார்ப்போமோ அப்படிப் பார்ப்போம்.

வராகக்குகை.—இதுவும் மற்றவைகளைப் போல ஒரே கல்லில் செய்யப்பட்ட விசித்திர வேலை. அநேக பிம்பங்களிதிலடங்கி யிருக்கின்றன. விஷ்ணு வராகாவதாரஞ் செய்து பூமாதேவியை ரக்ஷித்ததையும், அப்புறம் வாமனாவதாரஞ் செய்து ஆகாயத்தை அளந்ததையும் லட்சுமி அம்மை கொலுவிருப்பதையும் அதே லட்சுமி அம்மையை கஜங்கள் தண்ணீர்க் குடங்

களால் ஸ்நானஞ்செய்து வைப்பதையும் காண லாம்.

இம்மாதிரி அநேக குகைகள் இருக்கின்றன, இவற்றுள் முக்கியமானவைகளைப்பற்றி வரைந்தோம். இன்னுமனேக குகைகள் பாதிவேலை யாரம்பித்து வேலை முற்றிலும் முடியாமற் சிலவும், வேலை கொஞ்சங்கூட துவக்காமல் சிலவும் கொத்துங்குறையுமாக விருக்க நாம் பார்க்கலாம். எல்லாம் அழகாகவே யிருக்கும். இனி குகைகளை விட்டு கோவில்களுக்குப் போவோம்.

கடற்கரையோரமிருக்கும் கற்கோவில் அதியற்புதமான வேலை. கோவிலென்றால் நாம் பெரும்பாலும் பார்த்திருப்பதுபோல செங்கற் சுண்ணும்பு கட்டடமாக எண்ண வேண்டாம். அடிமுதல் நுனிவரையில் ஒரே கல்லில் செய்யப்பட்டிருக்கிற வேலை. இம்மாதிரி அருகாமையில் இரண்டு கோவில்களிருக்கின்றன. ஒன்று சிவனுக்கும் மற்றொன்று விஷ்ணுவுக்கும் கட்டப்பட்டவைகளே. ஒவ்வொன்றிற்கும் கூர்ச்சாய் முடியுங் கோபுரங்கள் இருக்கின்றன. இவைகளில் ஒன்று பெரிய கோபுரம் மற்றொன்று சிறியது. பெரிய கோபுரத்தின் உயரம் 60—65 அடி. இது முழுமையும் ஒரே கல்லால் கட்டப்பட்டிருக்கிறது. இந்த சிற்ப வேலையை ஒருநாள் முடியப் பார்த்திருந்தபோதிலும் கண்ணின் அவா தீராது, ஐயோ காலத்தின் கொடுமை, இப்பொழுது சமுத்திரம் கரையோரம் நெருங்கிவிடவே இந்தக் கோயிலில் அலைகள் மோதுகின்றன. அநேக அற்புத வேலைகள் அழிந்துபோயின. என்னமாயிருந்தாலும் அழகுமட்டில் குறையவேயில்லை. இந்தக் கோயிலைச் சுற்றி 14—15 அடி உயரம் பிரகாரமுண்டு. இக்காலத்தில் வெளிக்கோபுரம் பெரியதாகவும் உள்கோபுரம் கர்பகிருகத்தின்மேல் சிறியதாகவும் கட்டுவது வழக்கம். அப்படியல்ல பழைய வேலைக்காரர்களுடைய கோட்பாடு. கர்பகிருகத்தின் கோபுரந்தான் உந்நதமாயும் அழகாயுங் கட்டுவது வழக்கம். அந்த வழக்கத்தை மாமல்லபுரத்திலும் தஞ்சாவூர் பிரகதீஸ்வரஸ்வாமி கோவிலிலுந்தான் காணலாம். இந்த கடற்கரையோரமுள்ள கோவில்களில் லிங்கம் பார்வதி பரமசிவன் இன்னும் மற்ற சில பிரதிமைகள் ஜலசாயியாயிருக்கும் விஷ்ணு இவைகளைக் காணலாம். அலைகளால் மோதப்பட்டு உவர்நீரில் முழுகி யிருக்கிற இந்தக் கோவில் கொஞ்சங்கொஞ்சமாகச் சேதப்பட்டுக்கொண்டு வருகிறது.

ரதங்கள்.—ஊருக்கு 1 மயில் தூரம் தெற்கில் கடற்கரையோரமாக 5 ரதங்களிருக்கின்றன. ரதங்கள் என்றால் ரதங்கள்போல் ஒரே கல்லில் செதுக்கப்பட்டு பிரகாசித்து வரும் கோவிற்கள். ஒவ்வொன்றும் தனித்தனிக் கல்லில் குடையப்பட்டு அற்புதமாய் விளங்கி வருகிறது. இவைகளிலொன்று கொஞ்சம் மேற்கே ஒதுங்கி நிற்கிறது. இதின் ஆகிருதி கஜபிருஷ்டாகிருதி என்று ஜனங்கள் *வாஸ்துபோதசாஸ்திரப் பிரகாரம் செல்லுவார்கள். கஜபிருஷ்டம் என்றால் யானையின் பின்பக்கம். அதைப்போன்ற உருவம் என்பது அருத்தம். அதாவது கோவிலின் ஒரு பக்கம் குதிரை லாடம்போல் வளைந்திருக்கும் இந்த ரதத்தின் நீளம் 18- அடி அகலம். 11-அடி உயரம் 16- அடி இந்த ரதம் முற்றும் ஒரே கல்லில் செதுக்கப்பட்டு அநேக பதுமைகளுடன் விளங்குகிறது. சாஸனங்கள் வெகுவாய் இருக்கின்றன. இந்த ரதத்திற்கு தர்மராஜரதம் என்று பெயர் கூறுவார்கள். இதையும் மற்ற ரதங்களையும் அத்யந்தகாமன் என்ற பல்லவன் கட்டி வைத்தான். அவனது காலம் முதலியவைகளைப்பற்றிப் பின்பு விசாரிப்போம். இந்த ரதத்தில் அவன் பிருதுகள் அநேகம் எழுதப்பட்டிருக்கி

* வாஸ்துபோதம் என்பது ஹிந்து சிற்பசாஸ்திர நூல்கள் 32-ல் ஒன்று.

ன்றன. அவைகளில் முக்கியமானவைகள். புவனபாஜனன்—இந்த லோகத்திற்கு உடையவன்; த்ரைலோக்ய வர்த்தனன்—மூன்று லோகங்களுக்கும் க்ஷேமத்தைக் கொடுக்கப்பட்டவன்; அத்யந்தகாமன்—அளவற்ற ஆசையுள்ளவன்; அமேய மாயன்—அளவிட முடியாத தந்திரி; இவைகள் போன்றவைகள். இந்த ரதத்திற்கே 'அத்யந்தகாமபல்லவேச்வரகிருகம்' என்கிற பெயர் சாசனத்தில் வரையப்பட்டிருக்கிறது. அதாவது இந்தப் பெயருள்ள பல்லன் சிவனுக்காகக் கட்டிவைத்த கோவில் என்பது அருத்தமாகும்.

மற்ற 4-ரதங்கள் இதற்கு அருகாமையிலிருக்கின்றன. இந்த 4-கோவில்களுக்கும் அர்ச்சுனன் ரதம், பீமன் ரதம், நகுலன் ரதம், சகாதேவன் ரதம் என்று ஜனங்கள் சொல்வார்கள். இவைகள் தர்மராஜன் ரதம்போல அந்தமுள்ளவைகள். அழகாய்த் தோன்றும். ஒவ்வொரு ரதமும் ஒரே கல்லில் துடைத்துவிட்டாற்போல் செதுக்கிவிடப்பட்டிருக்கிறது. இந்த 5-ரதங்கள் மத்தியில் வழக்கப்படி ஒரே கல்லில் ஒரு பெரிய சிங்கமும் யானையும் வெட்டப்பட்டிருக்கின்றன. சிங்கம் 9 அடி உயரம்; அதற்குத் தகுந்த காத்திரம். யானையோ 14-அடி நீளம், 12-அடி உயரம். யானைமட்டில் கொஞ்சம் குறைந்த வேலையிலேயே விட்டுவிடப்பட்டதாகவும் முற்றிலும் முடியவில்லை என்றும் தோற்றுகிறது. இந்த ரதங்களும் கீழ்ப்பக்கத்தில் ஒரு அழகான நந்தியு மிருக்கிறது. இந்த ரதங்களில் சில சரிவர செதுக்கப்பட்டு முடிவு பெறாமல் அறைகுறையாக விடப்பட்டிருக்கின்றன. அதுவும் ஒரு அழகாகவே யிருக்கிறது. ஐயோ காலத்தின் கொடுமை, சில இடங்களில் இடி விழுந்து ஒரு ரதம் நடுவில் இரண்டாக பிரிவுபட்டிருக்கிறது- இவைகளின் கோபுரங்கள் பருப்புத் தேங்காய் (Pyramid) போல முடியும். ஒரே கல்லில் ஒன்றின்மேலொன்றாக அநேக அடுக்குகள்குறைந்து மேற்புரம் சிங்காரமாகச் செதுக்கப்பட்டிருக்கிறதபடியால் மனதைக் கவரும். இந்த ரதங்களை மாமல்லபுரத்திலிருக்கும் பழைய கல்வேலையாக நாம் போகப்போகக் காட்டுவோம்.

இந்த ஊருக்கு 2-மயில் தூரம் வடக்கில் 'சாலுவன்குப்பம்' அல்லது 'இடையன்புடல்' என்று 2 பெயர்கள் வழங்கி வரும் ஊரில் பல்லவ குகை ஒன்று இருக்கிறது. அதையும் மாமல்லபுரத்து சிற்ப வேலையில் சேர்த்து வரைவது வழக்கம். இந்தக் குகைக்கு அருகாமையில் ஒரு மண்டபமுண்டு. அதை கோவிலென்றும் சொல்லலாம். மாமல்லபுரத்து வேலையைப்போல இவ்விடத்திலும் சிற்ப சாஸ்திரம் அதிக அந்தமாய் விளங்குகிறது. இவ்விடத்தில் அநேக சாஸனங்களுமுண்டு. இடையன் புடலிலிருக்கும் கோவிலில் ஒரு நேர்த்தியான லிங்கமிருக்கிறது.

இவ்வளவு தூரம் நாம் சிற்பத்தின் அழகையும் குகைகளையும் பற்றி எழுதி வந்தோம். மாமல்லம் குன்றுகளுக்கு வடபக்கத்தில் அர்ச்சுனன் தபசுக்கு வடமேற்கில் 'கணேசன்குகை' என்று ஒரு குகை இருக்கிறது. இதுவும் மற்றக் குகைகளைப்போல அழகாயிருப்பதுடன் ஒரே கல்லில் கொஞ்சம் கோபுரம் முதலானவைகளும் செதுக்கப்பட்டதாயிருக்கிறது. சிறியதாயினும் வெகு அந்தம். இந்த கணேச கோவிலில் முக்கியமான ஒரு சிலா சாஸனமிருக்கிறது. அது பல்லவ கிருந்த எழுத்தில் எழுதப்பட்டிருக்கிறது. இந்த சாஸனத்தைப்பற்றியும் இந்த மாமல்லபுரம் உண்டான காலமிவைகளைப்பற்றியும் பல்லவ அரசர்களைப்பற்றியும் அடுத்த சஞ்சிகையில் எழுதுவோம்.

———:(*):———

## CHILDREN'S PAGE.
### சிறுவர்க்கால பக்கம்.

[விவேகசிந்தாமணியை வாசிக்கும் சிறுவர் சிறுமிகளுக்காக எழுதப்பட்டது.]

### ஓணன் கதை.

ஒரு நாள் காலையில் ரெங்கன் என்னுமொருவன் * வெங்கன் என்னும் தன் சிநேகிதன் தன்னுடைய வீட்டிற்குள் வரக்கண்டு மிக்க நேசங்கொண்டாடி, காலை வந்தனங்கள் செய்து, இருவரும் சிற்சில சமாசாரங்களைப்பற்றிப் பேசிக்கொண்டிருந்தார்கள். வானங்கறுத்து மேகங்கூடி இடி இடிக்க ஆரம்பித்தது. இருவரும் வெளியே வந்து வானத்தில் வில்லுபோட்டிருக்கக்கண்டார்கள். "பார்! வில்லின் வர்ணங்களை! என்ன நேர்த்தியா யிருக்கிறது? என்று ரெங்கன் கேட்க, வெங்கன் உடனே "உன்னுடன் பேசவேண்டிய சமாசாரம் ஒன்றுண்டு" என்று சொல்லி இருவரும் உள்ளே சென்றார்கள்.

**வெங்கன்:**—"நேற்று சாயந்திரம் ஒரு ஓணனைக் கண்டேன். அதைப் பிடித்து வீட்டில் கொண்டுவந்து வேடிக்கை பார்த்தேன். அதின் நிறம் பச்சை;—

**ரெங்கன்:**—இருட்டு வேளையில் பார்த்தாய் போலிருக்கிறது.

**வெங்கன்:**—அதின் நிறம் பச்சை. இப்பொழுது நாம் வில்லில் பார்த்த பச்சை வர்ணத்தைப் பார்க்கிலும் நேர்த்தியா யிருந்தது.

**ரெங்கன்:**—உனக்கு கண்களிருக்கிறதோ?

**வெங்கன்:**—எனக்குக் கண்களுண்டோ இல்லையோ வென்று பார்க்க உன்கண்கள் எங்கே போயின? இதனால் உனக்கு கண்களில்லை யென்று நினைக்கிறேன்.

**ரெங்கன்:**—ஓணன் பச்சைநிற முள்ளதென்று வெளியில் சொல்லாதே, சிரிக்கப் போகிறார்கள். ஓணனின் நிறம் மஞ்சள்.

**வெங்கன்:**—அடே ஓணனின் நிறம் மஞ்சளென்று சொல்ல வெட்கமில்லையா? அல்லது விளையாட்டுக்குச் சொல்லுகிறாயோ? இனிமேல் மஞ்சளென்று சொல்லாதே, ஓணனின் வர்ணம் பச்சையே.

**ரெங்கன்:**—தலைமேலேறுவாய் போலிருக்கிறதே. கொஞ்ச நாளுக்கு முன்தான் நானுமொரு ஓணனைக் கண்டேன். அதின் மஞ்சள் வர்ணத்தை நான் என்னவென்று சொல்லுவேன்!

**வெங்கன்:**—எனக்குச் சிரிப்பு வருகிறது. இப்படித்தான் பிடிவாதம் செய்வாயோ? உனக்குத் தெரியாவிட்டால் தெரியாதென்று சொல்லுகிறது தானே. தனக்குத் தெரியாத விஷயங்களை 'தெரியாது' என்று வணக்கமாய்ச் சொல்லி ஒப்புக்கொள்வது பெருந்தன்மைக்கு அடையாள மல்லவோ?

இப்படி இருவரும் வாய்ச்சண்டையிலிருந்து கைச்சண்டைக்கு வருவார்கள் போலிருந்தது. இவர்களிப்படி சண்டைபோட்டுக்கொண்டிருக்கும் சமயத்தில் மழை ஒரு பாட்டம் பெய்து ஓய்ந்தது. ரெங்கனுக்கும் வெங்கனுக்கும் தெரிந்த ஒரு சிநேகிதன் ஏதோ அவசரமாய் ஓடிவந்தான். அவன் பெயர் * சங்கன், அவன் வந்து சேர்ந்ததும் வெங்கன் சங்கனைப்பார்த்து "சங்கா! ரெங்கனுக்கும் எனக்கும் ஒரு பெரிய வாதம். அதை நீதான் தீர்த்துவிட வேண்டும்." என்று கேட்டான்.

**சங்கன்:**—'அதென்ன' வென்றுகேட்க வெங்கன் "நானும், அவனும், வெவ்வேறு நாட்களில் ஒரு ஓணனைப் பார்த்தோம்." என்றான்.

* 'வெங்கன்' என்று சாதாரணமாய் கூப்பிடுவது. வெங்கடாராமன் என்பது சரியான பெயர்.

* சங்கரன் என்னும் பெயரை சங்கன் என்று வழக்கமாய் கூப்பிடுகிறது.

சங்கன்:—ஓணை? நானுமொன்று பார்த்தேன் ஞாபகம் வருகிறது.

ரங்கன்:—நீயும் பார்த்தாயா? மஞ்சள் தானே?

வெங்கன்:—சங்கா, கேள், நான் அதன் நிறம் பச்சை யென்றேன். அதற்கு ரெங்கன் பச்சையல்ல மஞ்சளே யென்ருன். பச்சைதான் என்றேன், மஞ்சள்தான் என்ருன். இதுதான் சண்டை. நீயும் ஓணானைப் பார்த்தாகச் சொன்னது எங்களுக்குச் சந்தோஷந்தான். ஓணானின் நிறம் பச்சையா, மஞ்சளா?

சங்கன்:—பச்சையு—

வேங்கன்:—பலே! ஜெயம். பச்சை என்று விட்டான்.

ரெங்கன்:—அட தடபுடலே! முற்றும் கேட்டுவிட்டுக் குதி.

சங்கன்:—பச்சையு மில்லை, மஞ்சளுமில்லை; ஓணானின் நிறம் சிவப்பு.

ரெங்கன்:—நீ சரியாய்ச் சொல்லுவாயென்று நினைத்திருந்தேன். நன்ருய்ச் சிவப்பென்ருய். வெளியில் சொல்லாதே.

சங்கன்:—சிவப்புத்தான். நேற்றுக்கூடப் பார்த்தேன். வீட்டிலேயே ஒன்றைப் பிடித்து வைத்திருக்கிறேன். போய் பார்ப்போம் வாருங்கள்.

"அதுவேசரி" என்று இருவரும் சொல்லி சங்கனுடன் புறப்பட்டு அவன் வீட்டுக்கே போனுர்கள். அவ்வோணானைப் பார்க்க, அதன் நிறம் வெள்ளையாயிருக்க ஒவ்வொருவரும் தன் தன் மூக்கில் விரலை வைத்துக்கொண்டு தயங்கினுர்கள். மூன்று பேர்கள் சொன்ன நிறங்களில் ஒன்ருவது இராமல் ஓணானின் நிறம் வெள்ளையாயிருந்தது ஆச்சரியமே.

சிறுவர்களே, சிறுமிகளே,

ஏன் மூன்று பேர்களும் இப்படி தப்பினுர்களென்று உங்களுக்குத் தெரியுமா? மூன்றுபேர்களும் ஓணானியற்கையை அறியாதவர்கள். அவர்கள் சொன்ன எல்லா நிறங்களிலும் ஓணான் காணப்படும். பச்சை, மஞ்சள், சிவப்பு, வெள்ளை முதலிய இப்பேர்ப்பட்ட வர்ணங்கள் ஓணானிடத்தில் அடிக்கடி மாறுபடும். இதை அறியாமல் அவர்கள்தான் தான் பார்க்கும் பொழுது ஓணான் எந்த நிறத்திலிருக்குமோ அந்த நிறமே ஓணானுடைய வாஸ்தவமான நிறம் என்று தீர்மானித்ததினுல் மூன்று பேரும் மோசம் போனுர்கள். ஆகையால் ஒரு விஷயத்தை முற்றுமாராயாமல் நமது அபிப்பிராயத்தை வெளியிடக் கூடாது. இந்தக் கதையினுல் ஓணானுடைய நிறம் அடிச்கடி மாறுபடும் என்று கற்றுக்கொண்டீர்கள் அப்படி ஏன் மாறுகிறதென்று அறிய நீங்கள் ஆசைப்படுவீர்கள். உங்கள் ஆசையை பூர்த்திசெய்ய ஓணான் நிறம் மாறுவதற்குக் காரணம் சொல்லுகிறேன் கேளுங்கள்.

ஒரு ஓணானைப் பிடித்து அதின் உடம்பினுடைய பாதிபாகத்தில் மாத்திரம் சூரிய வெளிச்சம் படும்படியாய் வைத்தால், சூரிய வெளிச்சம் படாத மறுபாகத்தில் பழுப்புநிறம் கலந்த மங்கலான மஞ்சள் நிறத்தில் அந்த ஓணான் காணப்படும். அது சாதாரணமா யிருக்கும்போது ஊதா, பச்சை முதலான வர்னங்களில் காணப்படும். ப்ளினி (Pliny) யென்னு மொரு துரை "சுற்றி இருக்கும் வஸ்துக்களின் நிறத்தில் ஓணான் காணப்படும்" என்று சொல்லுகிருர். புதிதாய் கண்டுபிடித்த காரணம் என்னவென்ருல்:—ஓணானுடைய மேல் தோலில் அநேக வர்ணப் பசையுள்ள சிற்றறைகளிருக்கின்றன. அவைகளை "பிக்மென்ட் ஸெல்ஸ்" (Pigment Cells) என்று இங்கிலீஷில் சொல்லுவார்கள். அந்த சிற்றறைகளில் அநேக வர்ணமுள்ள மெல்லிய தோல்கள் (layers) அடுக்கடுக்காயிருக்கின்றன. தேகத்தில் ரத்தம் ஓடிக்கொண்டே இருக்கிறதென்று உங்களுக்கு முன்னமே தெரிந்திருக்கலாம் இந்த ஓணான் தேகத்திலுள்ள ரத்தம் ஓடும்போது சிற்றறைகளிலுள்ள மெல்லிய தோல்களின் இருப்பிடம் அடிக்கடி மாறுகின்றன. அநேக வர்ணமுள்ள அந்த மெல்லிய தோள்களில் எந்தெந்த வர்ணமுள்ள தோல் மேலாக இருக்கிறதோ அந்தந்த வர்ணத்தில் ஓணான் காணப்படும்.

---

# Children's Address of Welcome to the Viceroy.

## The Viceroy's Visit.

### An appeal on behalf of the Children.

Mr. C. V. Swaminatha Aiyar writes :—

We desire to call the attention of parents and the public to our Tamil appeal in the *Vivekachintamai* issue of September and to the Social Service Branch Secretary's Circular dated 20th September, calling attention to the mutual sympathy and attraction of love naturally existing between the child-heart of the great man now filling the august position of the Viceroy of India and the pure hearts of the student population, and publicly appealing for co-operation and help to consummate the intuitive aspiration of the young hearts to respond to the love and affection of the great heart that "goes out to them." We hereby respectfully appeal to them one and all as also to our teachers and guides of children in schools and colleges and other educational organisations to lend us a helping hand in making the children's movement a success.

It is proposed to print the Children's Address of Welcome to the Viceroy with the "children's tribute of love" which appeared in the Children's Day record of the *Vivekachintamani* and distribute it to all the students and school children so far as funds at our disposal would permit. We have already distributed some 3000 copies of these unaided and find our very limited resources unequal to the demand made on us for more copies. We require at least some 20,000 copies more which alone would cost about Rs. 250. We have other expenses besides which will come to as much nearly as the bare cost of printing and paper. We feel, we cannot afford to miss the auspicious occasion of the Viceroy's visit to utilise the honest and glowing enthusiasm of the young hearts and turn it to purpose to sow the good seed of Social Service and sensible patriotism so well prepared by the Viceroy in his great speech of September 17th closing the Autumn Session of the Supreme Legislative Council at Simla. It is also in contemplation to found a "Hardinge Medal for Social Service" in honour of the Viceroy's visit and in commemoration of their Excellencies' parental solicitude for the welfare of our children, to be given annually to students or student-organizations engaged in healthy activities and inspiring social service such as those commended by the Viceroy, But this is a matter for future action after due deliberation by the elders of Society.

Meanwhile, a subscription list has been opened to enable us to meet our immediate expenses in connection with the children's movement, and voluntary subscriptions limited to Rs. 10 per head from gentlemen will be thankfully received and utilised by the Hon. Secretary to the Social Service Branch of the Ananda Mission, Lalitalaya, Mylapore, Madras.

Our grateful thanks are due to His Excellency Lord Pentland for his Lordship's very kind appreciation of the motive which impelled us to promote this movement of a Children's Address of Welcome to the Viceroy. We are also indebted to a number of leading gentlemen who enthusasitically received our suggestion and gave to it their hearty approval and support as an excellent idea that deserves to be carried out.

[Among the functions that have been notified to take place during H.E. the Viceroy's visit to Madras next month, few will fail to notice the absence of any item in which a place is given to the school children of this city. The omission is regrettable and Mr. Swaminatha Iyer's suggestions deserve consideration.—ED. *Hindu.*]

## Minutes of approval & suggestions

"His Excellency appreciates your desire to present an address to the Viceroy"......—Private Secretary to H. E. the Governor of Madras.

"The idea is beautiful and am sure the presentment will appeal to one's heart. I think it better that the chorus be set to music and sung accompanied by a fitting musical instrument on the great occasion. The idea of child-heart appealing to a ruler and expressing its love pure and simple to him is natural and the effect is irresistable."——R. Sadagopachariar, High court Vakil, Madras.

"I heartily support the movement and the address is in every way suitable."—T. R. Ramachandraiyer, High Court Vakil, Madras,

"Good idea......We will support it......" C. P. Ramaswami Iyer, High Court Vakil, Madras.

"The idea of a children's address is very happy." —T. Srinivasa Iyer, Principal, Hindu College, Tinnevelly.

"I quite approve of it."—K. Srinivasa Iyengar, High Court Vakil, Madras.

"A good idea".—Dewan Bahadur P. Rajaratna Mudaliar, C. I. E. Retd. Inspctr. Genl. of Registrn.

"It is an excellent idea; but as Mr. Stone says it should be unofficial"—Rao Bahadur A. C. Pranatharthihara Iyer Avl, I. S. O., Inspr. of Schools, IV Circle, Madras.

"I heartily agree that the address should be unofficial. It is an excellent idea and Mr. Swaminathaiyer deserves the thanks of the public for his suggestion."-The Hon'ble Mr. T.V. Seshagiri Iyer, F. M. U.

"It is an excellent idea and it receives my full sympathy."—Dewan Bahadur M. O. Parthasarathi Iyengar, Retired Dist. Judge & Advocate, High Court, Madras.

"The idea of presenting a children's address is good."—The Honble Rao Bahadur B. N. Sarma.

"The movement has my hearty approval."—Professor B. Hanumantha Rao. F. M. U.

"I approve of the idea and shall be glad to serve in the Social Service Commitee......—"The Hon'ble Mr. Justice Dewan Bahadur T, Sadasivier,

"I approve of the idea......" Sir. S. Subrahmania Iyer, LL D., K. C. I.E., Dewan Bahadur, Retired Judge of the High Court, Madras.

"I have no doubt that the idea is very excellent." P. V. Duraiswamy Mudlr., High Court Vakil.

"I agree" V, Ethiraja Mudlr, High court Vakil,

"The idea is very good and I heartily approve of it."—T. A. Swaminathaiyar, Headmaster, Hindu High School, Triplicane,

"The idea is very good...... I will contribute towards it."—Right Rev. Mjr. J. Lopes, Vicar General of Mylapore.